marxist.tncpim.org 999 477 8471



மே 2020, விலை ரூ.15.00

# மார்க்சிஸ்ட்

தத்துவார்த்த மாத இதழ்

2018 ஜனவரி முதல் ஒலி இதழாகவும் வெளியாகிறது

VOLUME 31 | ISSUE 11 | May 2020 | PRICE Rs.15-

லெனின் 150

அதிகாரத்தைத் தொழிலாளர் வர்க்கம்
நிச்சயம் தனது கையில் எடுத்துக் கொள்ளும்.

தொழிலாளி

உ.பி., ம.பி., குஜராத்தில்
தொழிலாளர் சட்டங்கள்
நிறுத்தி வைப்பு

# ஒட்டுவாரொட்டி

## கொரோனாவும் சாமானிய மக்களும்

# மார்க்சிஸ்ட் தமிழ் மாத இதழ்

2020, மே இதழ்

(கொரோனா பெருந்தொற்று சிறப்புக் கட்டுரைகளுடன்)

மின்நூல் வடிவில்

# உள்ளடக்கம்

லெனின் 150

# புதியதொரு சகாப்தம்

பிரகாஷ் காரத்

தமிழில்: ச. லெனின்

(ரஷ்யப் புரட்சியின் நூற்றாண்டைச் சிறப்பிக்கும் வகையில் 2017ஆம் ஆண்டு டிசம்பர் மாத ‘ஃபிரண்ட்லைன்’ இதழில் வெளியான கட்டுரை)

வரலாற்றுச் சிறப்புமிக்க ரஷ்யப் புரட்சி உலகம் முழுமைக்குமான ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கியது. ரஷ்யப் புரட்சியின் நூற்றாண்டைக் கொண்டாடும் இத்தருணத்தில் (2017) இருபதாம் நூற்றாண்டின் நிகழ்வுகளை சற்றே பின்னோக்கிப் பார்ப்பது ரஷ்யப் புரட்சியின் முக்கியத்துவம் மற்றும் அதன் தற்கால பொருத்தப்பாடு குறித்து மதிப்பிட உதவும்.

மனிதகுல வரலாற்றிலேயே தன்னைச் சுரண்டிய ஆளும் வர்க்கத்தைத் தூக்கியெறிந்துவிட்டு சுரண்டலற்ற ஓர் அரசு உருவானது ரஷ்யப் புரட்சியால்தான். அதன் மூலமே முதலாளித்துவத்திற்கு உறுதியானதொரு மாற்றாக சோஷலிசம் உலக வரலாற்றில் முதன்முறையாக முன்னுக்கு வந்தது. தற்கால உலகிலும் ரஷ்யப் புரட்சி நீடித்த பொருத்தமுடையதாக இருப்பதற்கு இந்த உள்ளீடே சான்றாகும்.

ரஷ்யப் புரட்சி என்பது ஜாரின் எதேச்சாதிகாரத்திற்கு எதிரான புரட்சி மட்டுமல்ல; அது ஏகாதிபத்தியம், முதலாளித்துவம் ஆகியவற்றுக்கு எதிரான சோஷலிச குணாம்சம் கொண்ட ஒரு புரட்சியாகும். இதற்கு ஒரு சர்வதேசிய முக்கியத்துவம் உண்டு. லெனினோ, போல்ஷ்விக்குகளோ இப்புரட்சியை தங்கள் நாட்டிற்கு மட்டுமேயானதாகப் பார்க்கவில்லை. அவர்கள் இதை உலக சோஷலிச புரட்சிக்கான முன்னோடியாகவே பார்த்தனர்.

ரஷ்யப் புரட்சியை அதன் ஏகாதிபத்திய எதிர்ப்பு உள்ளடக்கத்தைப் பிரித்து விட்டு புரிந்துகொள்ள முடியாது. ஏகாதிபத்தியத்திற்கு எதிரான மார்க்சிய புரிதலை லெனின் மேம்படுத்தினார். அது அவரது உண்மையான, முக்கியமான பங்களிப்பாகும். இந்தப் புரிதலை அடிப்படையாகக் கொண்டே புரட்சிக்கான உத்தி உருவாக்கப்பட்டது. முதலாளித்துவத்தின் உலகளாவிய வளர்ச்சியின் அம்சத்தை மார்க்ஸ் முன்னுணர்ந்திருந்த போதிலும் அவரின்

மறைவிற்குப் பிறகே முதலாளித்துவம் ஏகபோக முதலாளித்துவமாக வளர்ந்தது.

மார்க்சிய அணுகுமுறையில் லெனினுக்கு இருந்த மேதமையின் விளைவாக ஏகபோக முதலாளித்துவத்திற்குத் தவிர்க்க முடியாத தேவையாக, உலகளாவிய அமைப்பு முறையைக் கொண்ட ஏகாதிபத்தியத்தின் வளர்ச்சி உள்ளது என்பதை அவர் கண்டுணர்ந்தார். இதை உலகப் பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கான உறுதியான நடைமுறை மற்றும் நீண்ட கால உத்தியோடு அவர் இணைத்தார்.

முழுமையானதொரு முதலாளித்துவ வளர்ச்சிக் கட்டத்திற்குப் பிறகே சோஷலிசப் புரட்சி சாத்திய என்ற வழக்கமான மார்க்சிய புரிதலை லெனினின் இந்த ஏகாதிபத்தியம் பற்றிய புரிதல் உடைத்தெறிந்தது. முதலாளித்துவ வளர்ச்சி முழுமையடையாத நிலையிலும் கூட ஏகாதிபத்திய காலகட்டத்தில் ஏற்றத்தாழ்வான முதலாளித்துவ வளர்ச்சியின்போதும் சோஷலிசப் புரட்சி வெற்றியடையும் சாத்தியம் உள்ளது என லெனின் குறிப்பிட்டார்.

ஒட்டுமொத்த உலகமும் அனைத்து முதலாளித்துவ அமைப்பும் ஏகாதிபத்தியத்தால் ஒரே குடையின்கீழ் வந்து விட்டது. அதன் பலவீனமான கண்ணியில் தாக்குதல் தொடுத்தால் அதை உடைத்தெறிய முடியும் என்றார் லெனின். ஏகாதிபத்தியங்களுக்கு இடையிலான போட்டிகளின் விளைவே முதலாம் உலகப் போர் என்றும் அதன் விளைவாக ஜாரின் ஆளுகையில் இருந்த ரஷ்யா அத்தகைய பலவீனமான கண்ணியாக உள்ளது என்பதையும் லெனின் தான் முதலில் சுட்டிக் காட்டினார்.

ரஷ்யப் புரட்சியின் இரண்டாவது முக்கியமான நீண்டகால உத்தி என்பது சோஷலிசப் புரட்சியைக் கட்டியமைக்க முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியை தொழிலாளி வர்க்கம் தலைமையேற்று நடத்தலாம் என்பதாகும். எவ்விதத் தடையுமின்றி சோஷலிச கட்டத்தை அடைய தொழிலாளி வர்க்கம் ஜனநாயகப் புரட்சிக்குத் தலைமை ஏற்க வேண்டியதன் அவசியம் குறித்து முதன்முதலில் வாதாடியதும் லெனின் தான்.

முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்கும் சோஷலிசப் புரட்சிக்கும் இடையே மிகப்பெரிய சீனப் பெருஞ்சுவர் எதுவும் இல்லை என்றார் லெனின். இந்தப் புரிதலின் அடிப்படையிலேயே ஜார் ஆட்சியைத் தூக்கியெறிந்த பிப்ரவரி புரட்சிக்குப் (முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சி) பிறகு, “ புரட்சி இதோடு முடிவடைந்துவிடவில்லை; சோஷலிசப் புரட்சியை நோக்கி நாம் முன்னேற

வேண்டும்” என்று லெனின் தலைமையிலான போல்ஷ்விக் கட்சி அறைகூவல் விடுத்தது.

இத்தருணத்தில் லெனின் நாடு கடத்தப்பட்டிருந்தார். பிப்ரவரி புரட்சியின்போது தாயகம் திரும்பிய லெனின், தனது “ஏப்ரல் ஆய்வுரை”யில் பிப்ரவரி புரட்சியானது முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியின் முழுமையை அடைந்து விட்டது என்று வாதிட்டார். இந்தப் புரட்சிக்குப் பிறகு அமைந்துள்ள முதலாளித்துவத் தலைமையை உழைக்கும் வர்க்கம் ஏற்கக் கூடாது; நாம் மேலும் முன்னேறி தொழிலாளி- விவசாயிகளை அணிதிரட்டி, அதிகாரத்தைக் கைப்பற்றி சோஷலிச கட்டத்தை அடைய வேண்டும் என்றார் லெனின்.

முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியை தொழிலாளி வர்க்கம் தலைமையேற்று நிறைவேற்றிய பிறகு சோஷலிச கட்டத்தை நோக்கி முன்னேறுவதற்கு படைப்பாற்றல் மிக்க இரண்டு முக்கியமான உத்தியை போல்ஷ்விக் கட்சி மேற்கொண்டது. ஒன்று விவசாயத் திட்டம்; மற்றொன்று தேசிய இனங்கள் குறித்த திட்டமாகும்.

விவசாயி-தொழிலாளி ஒற்றுமையை உருவாக்கும் உத்தியை கருத்தில் கொண்டே விவசாயத் திட்டம் உருவாக்கப்பட்டது. நிலப்பிரபுத்துவத்தை ஒழிப்போம் என்ற முழக்கத்தின் மூலம் தொழிலாளர்களுடன் ரஷ்ய விவசாயிகளை அணிசேர்க்க முடியும். முதலாளித்துவம் வளர்ந்து வரக்கூடிய அரைநிலப்பிரபுத்துவ நாட்டில் லெனின் புரட்சிக்கான உத்தியாக விவசாயி-தொழிலாளர்களின் ஒற்றுமையை முன்வைத்தார். “முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு, நிலப்பிரபுத்துவத்திற்கு முடிவு கட்டுங்கள்; உழுபவனிடமே நிலத்தை ஒப்படையுங்கள்!” என்ற கோரிக்கையை முன்வைத்து போல்ஷ்விக்குகள் வாதிட்டனர்.

இதையே “அமைதி, நிலம், ரொட்டி(உணவு)” என்ற ரஷ்யப் புரட்சியின் முழக்கம் எதிரொலித்தது. நிலப்பிரபுத்துவத்திற்கு முடிவு கட்டுவது; நிலக் குவியலை உடைத்தெறிவது என்ற போல்ஷ்விக்குகளின் உறுதியான திட்டமே ரஷ்யப் புரட்சியில் விவசாயி-தொழிலாளியை ஓரணியில் நிற்க வைக்கும் திட்டத்தை நடைமுறைப்படுத்தியது. பிப்ரவரி புரட்சி வரையில் ஆலைத் தொழிலாளர்களும் ஜார் ஆட்சி ராணுவத்தில் அதிருப்தியோடு இருந்த வீரர்களுமே போல்ஷ்விக் கட்சியில் அதிகம் இருந்தனர். இந்த ராணுவ வீரர்களைத்தான் ‘சீருடையில் உள்ள விவசாயிகள்’ என லெனின் அழைத்தார். ஜாரின் ராணுவம் வெறிச்சோடிக் கலைந்தபோது இந்த ராணுவ

வீரர்களே ‘உழுபவனுக்கே நிலம்’ என்ற போல்ஷ்விக்குகளின் செய்தியை விவசாயிகளிடம் எடுத்துச் சென்றனர்.

தேசிய இனங்கள் குறித்த பிரச்சனைகள்

ஜாரின் ஆதிக்கத்தில் இருந்த ரஷ்யா பல்வேறு தேசங்களை உள்ளடக்கிய ஒரு பேரரசாக இருந்தது. ஜாரின் எதேச்சாதிகார நுகத்தடியின் கீழ் நூற்றுக்கும் அதிகமான தேசிய இனங்கள் அடிமைப்பட்டு இருந்தன. ஜார் பேரரசின் தேசிய ஒடுக்குமுறையால் வேதனையுற்றவர்களுக்கு தேசியம் குறித்த கேள்விகள் முக்கிய அம்சமாக இருந்தன. ஜாரை தூக்கியெறியும் போராட்டத்தின் ஒரு பகுதியாக தேசிய இனங்களுக்கான சுயநிர்ணய உரிமையை முதன்முதலில் போல்ஷ்விக்குகளே முன்வைத்தனர்.

“பிரிந்து செல்வதற்கான முழு உரிமை; விரிவான, தேசிய மற்றும் உள்ளூர் தன்னாட்சி, சிறுபான்மையினருக்கு விரிவான உரிமைகள்” ஆகியவையே தேசிய இனங்கள் குறித்த பிரச்சனைகளுக்கு புரட்சிகர தொழிலாளர்களின் திட்டம் என லெனின் பதிலளித்தார். பல்வேறு தேசிய இனங்களின் உரிமைகளை உத்தரவாதப்படுத்தும் உத்தியை போல்ஷ்விக்குகள் கையாண்டதே ரஷ்யப் புரட்சிக்கு முன்பும் பின்பும் ஆன வெற்றிக்குக் காரணமாகும். இத்தகைய பல்வேறு தேசிய இனங்களின் ஒருங்கிணைவே சோவியத் சோஷலிச ஒன்றியங்களின் குடியரசு அமைய அடித்தளம் இட்டது.

தேசிய இனங்கள் குறித்த இந்த உத்தி ரஷ்யாவிற்கான அடித்தளம் மட்டுமல்ல; இதையே பின்னர் 1920ஆம் ஆண்டு கம்யூனிஸ்ட் அகிலத்தில் தேசிய இனங்கள் குறித்த பிரச்சனைகளுக்கான தீர்வாகவும் லெனின் முன்வைத்தார். இதன் மூலம் காலனியம், தேசியம் குறித்த பிரச்சனைகளுக்கான நீண்ட கால, நடைமுறை உத்திகளுக்கு ரஷ்யப் புரட்சி ஒரு புதிய வழியைக் காட்டியது.

அரசும் புரட்சியும்

அரசு அதிகாரத்தைக் கையில் எடுப்பதில் ரஷ்யப் புரட்சி கவனம் செலுத்தியது. ஆளும் வர்க்கத்தின் கீழ் இருந்த அரசைத் தூக்கி எறிந்துவிட்டு தொழிலாளி வர்க்கம் ஒரு புதிய அரசை நிறுவ வேண்டியது அவசியம் என்று ரஷ்யப் புரட்சிக் காலத்தில் எழுதப்பட்ட அரசும் புரட்சியும் என்ற நூலிலேயே லெனின் அழுத்தமாகக் கூறியிருந்தார். 1871-இல் நிகழ்ந்த பாரீஸ் கம்யூன் அனுபவங்கள் குறித்த மார்க்சின் பகுப்பாய்வை கருத்தில் கொண்டே, அரசு அதிகாரத்தைக் கைப்பற்றுவது புரட்சியின்

மையமான பணி என்று லெனின் கூறினார். இந்த தத்துவார்த்த ரீதியான உறுதிதான் முதலாளித்துவ அமைப்பிற்கு உள்ளேயே சீர்திருத்த நடவடிக்கைகள் போதுமானது என்று பேசிய சமூக ஜனநாயக வாதத்தை உடைத்தெறிந்தது.

உலக அளவிலான தாக்கம்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலம் வரை ஏகாதிபத்தியங்களின் பேரரசுகளே நீடித்து வந்தன. பிரிட்டன், ஜெர்மனி, ஆஸ்ட்ரோ-ஹங்கேரி, ஜப்பான், ரஷ்யா ஆகிய பேரரசுகளே உலகை தங்களுக்குள் பிரித்துக் கொண்டு ஆதிக்கம் செலுத்தி வந்தன. இத்தாலி, போர்ச்சுக்கல் போன்ற சிற்றரசுகளும் இருந்தன. இத்தகைய பழைய காலனிய முறைக்கெல்லாம ரஷ்யப் புரட்சி முடிவு கட்டியது. ஜார் பேரரசு தூக்கி எறியப்பட்ட அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு உலகில் அநேகமாக ஒரே ஒரு பேரரசு மட்டுமே எஞ்சியிருந்தது.

தொழிலாளர் –விவசாயிகளின் கூட்டுறவில் எழுந்த ரஷ்யப் புரட்சி காலனிய, அரைக்காலனிய நாடுகளில் விடுதலைக்கான போராட்டங்களுக்கு வலுவான உந்துதலைக் கொடுத்தன. ஆசிய, ஆப்ரிக்க, லத்தீன் அமெரிக்கப் பகுதிகளில் தேசிய விடுதலைப் போராட்டங்களுக்கு அது ஊக்கமளித்தது. காலனிய நாடுகளில் நடைபெற்ற ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டங்களுக்கு சோவியத் அரசு தனது முழு ஆதரவை நல்கியது. இந்தியாவிலும் கூட ரஷ்ய நாட்டின் விவசாயி-தொழிலாளர் புரட்சியானது இந்திய தேசிய காங்கிரஸ், புரட்சிகர குழுக்களைச் சேர்ந்த விடுதலைப் போராட்ட வீரர்கள் மத்தியில் மிகப்பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

ஜனநாயகத்திற்கான போராட்டங்களிலும் ரஷ்யப் புரட்சியின் வலுவான தாக்கம் இருந்தது. பாசிசமே ஜனநாயகத்தின் மிகப்பெரும் எதிரியாகும். பாசிசத்திற்கு எதிரான போராட்டத்தில் உலக கம்யூனிஸ்டுகளும் சோவியத் ரஷ்யாவும் அளப்பரிய தியாகத்தை செய்தனர். பாசிசத்தை எதிர்த்த போராட்டத்தில்  சுமார் இரண்டரை கோடி சோவியத் மக்கள் தங்கள் இன்னுயிரை தியாகம் செய்தனர்.

மேற்கத்திய முதலாளித்துவ நாடுகள் நாடாளுமன்ற-ஜனநாயக முறையைப் பின்பற்றினாலும் கூட, பொருளாதாரத்தில் அவை எதேச்சாதிகாரத்தையே அமலாக்கி வந்தன. இங்கிருந்த தொழிலாளி வர்க்கம் தங்கள் நாடுகளில் போராட்டங்களை நடத்தி குறிப்பிடத்தக்க பயன்களை பெற்றது. சோவியத் ஒன்றியத்தின் தாக்கத்தின் விளைவாகவே மேற்கு ஐரோப்பாவில்

தொழிலாளர்களுக்கு மருத்துவ வசதி, ஓய்வூதியம் போன்ற பல மக்கள் நல்வாழ்வுத் திட்டங்கள் நடைமுறைக்கு வந்தன.

ரஷ்யப் புரட்சியானது உலகப் புரட்சிகர இயக்கங்களுக்கும் கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கும் வழிகாட்டியாக விளங்கியது. ஆசியாவில் சீனா, வியட்நாம், கொரியாவிலும், பின்னர் உலகின் மேற்குப் பகுதியில் இருந்த கியூபாவிலும் புரட்சிகள் வெற்றிகரமாக நடந்தேறவும், உடனடி மற்றும் நீண்டகால உத்திகளுக்கான தத்துவார்த்த அடித்தளத்தையும் அது வழங்கியது.

ரஷ்யப் புரட்சி நடந்து முடிந்து நூறாண்டுகளுக்குப் பிறகும் கூட அதன் பெருமையைச் சீர்குலைக்கும் வேலைகள் தொடர்ந்து நடைபெற்ற வருகின்றன. ரஷ்யாவில் தீவிரவாதத்தின் மூலம் சர்வாதிகார அரசு அமைக்கப்பட்டது என்பது போன்ற சதித்தனமான எழுத்துக்கள் ஆற்று வெள்ளம்போல் வெளிவந்துகொண்டே இருக்கின்றன. ரஷ்யப் புரட்சியின் நூற்றாண்டைக் கொண்டாடும் வேளையிலும் கூட அந்த முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

2017 நவம்பர் 7ஆம் தேதி வெளியான ‘கார்டியன்’ இதழின் தலையங்கம் இவற்றுக்குப் பதில் சொல்லும் முறையில் அமைந்துள்ளது. அதில் “ரஷ்யப் புரட்சியின் தன்மையை திருத்திக் கூறுவதற்கு ஏன் திட்டமிட்ட வகையில் தொடர்ச்சியான முயற்சிகள் நடந்து வருகின்றன? ஏனெனில் திடுக்கிடும் வகையில் அதற்கான பொருத்தப்பாடு இன்றும் நீடித்து வருகிறது. புதிய தாராளவாத முதலாளித்துவம் நெருக்கடியில் ஆழ்ந்துள்ள இத்தருணத்தில், ஏகாதிபத்தியம் தனது மேலாதிக்கத்தைத் தொடர்ந்து நீடித்துவரும் இவ்வேளையில், உலக அளவிலான ஏற்றத்தாழ்வு அதற்கு முந்தைய நிலைகளை எல்லாம் விஞ்சியுள்ள நிலையில், முதலாளித்துவத்தின் அதீதமான பேராசையால் உலக அளவில் சுற்றுச்சூழலுக்கு ஏற்பட்டுள்ள சீரழிவு போன்றவற்றுக்கு ரஷ்யப் புரட்சி பதில் அளிக்கிறது. இவை இவ்வாறு இருக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு மாற்று உள்ளது. அதுதான் சோஷலிசம்” என்று குறிப்பிட்டுள்ளது.

அக்டோபர் புரட்சியைப் போன்றதொரு புரட்சி மீண்டும் உருப்பெறாது என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. எனினும் அக்டோபர் புரட்சி நடைபெற்று முடிந்து நூறாண்டுகளுக்குப் பிறகும் கூட அதைத் தொடர்ந்த 20ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தேறிய புரட்சிகளின் அனுபவங்களை வைத்துப் பார்க்கும்போது எதிர்காலத்தில் உருவாக இருக்கின்ற புரட்சிகள், அக்டோபர் புரட்சியின்போது நிலவிய, சாதாரண, ஏழை எளிய மக்கள், தொழிலாளர்கள்,

விவசாயிகள், படைவீரர்கள் ஆகியோர் தங்கள் எதிர்காலத்தை தங்களது கைகளில் எடுத்துக் கொண்டார்கள் என்ற அத்தியாவசியமான அம்சங்களின் அடிப்படையில்தான் கட்டமைக்கப்பட வேண்டும் என்று கூறுவதே இங்கு பொருத்தமானதாக இருக்கும்.

நன்றி: ஃபிரண்ட்லைன்

# கேரளா சாதித்தது எப்படி?

அன்வர் உசேன்

கேரளாவின் கோவிட் 19 வைரசுக்கு எதிரான போராட்டம் மற்றும் வெற்றி குறித்து இந்திய பத்திரிக்கைகள் மட்டுமல்ல; உலகம் எங்கும் உள்ள சுமார் 30க்கும் அதிகமான பத்திரிக்கைகள் கட்டுரைகளை எழுதியுள்ளன. வாஷிங்டன் போஸ்ட்/ நியூ யார்க் டைம்ஸ்/ கார்டியன்/ அல்ஜசீரா/ கலீஜ் டைம்ஸ்/ எக்னாமிஸ்ட் போன்ற புகழ்பெற்ற  பத்திரிக்கைகளும் இதில் அடங்கும்.

இந்தியாவில் மட்டுமல்ல உலகில் உள்ள பல நாடுகளுக்கும் கேரளா முன்மாதிரியாக உள்ளது. கேரளாவைவிட நன்றாக செயல்பட்ட நாடுகளைக் குறிப்பிட வேண்டும் எனில் சோசலிச நாடுகளான சீனா, வியட்நாம் மற்றும் கியூபாவைதான் குறிப்பிட வேண்டும். இதன் பொருள் மற்ற நாடுகள் ஒன்றுமே செய்யவில்லை என்பது அல்ல! சில முதலாளித்துவ நாடுகள் கூட கடுமையாக பணியாற்றி உள்ளன. ஆனால் கேரளா மற்றும் சோசலிச நாடுகளின் மக்கள் ஆதரவு அணுகுமுறை தீர்மான பங்கை வகித்துள்ளன என்பதே முக்கியமானது.

கேரளாவின் வெற்றிக்கு கீழ்கண்ட முக்கிய காரணங்களை குறிப்பிடலாம்:

- அரசுத்துறையில் வலுவான சுகாதார கட்டமைப்பு
- அதிகார பரவல் காரணமாக வைரசுக்கு எதிரான போரில் உள்ளாட்சி அமைப்புகளின் பிரமிக்கத்தக்க பங்கேற்பு
- குடும்பஸ்ரீ போன்ற சுய உதவி குழுக்கள் மற்றும் வெகு மக்கள் அமைப்புகளின் கடுமையான பணி
- முன் கூட்டிய திட்டமிடல்
- சீரிய அரசியல் தலைமை
- மக்களின் ஒத்துழைப்பு
- சிவப்பு நாடாவில் சிக்கி கொள்ளாத நிர்வாக எந்திரம்

- மருத்துவ பாதுகாப்பை உத்தரவாதப்படுத்திய பொருளாதார பாதுகாப்பு.

சிறந்த சுகாதார கட்டமைப்பு

கேரளாவின் சுகாதார கட்டமைப்பு வலுவானது மட்டுமல்ல; தரமானதும் கூட! அரசு மருத்துவமனைகள் தனியார் அமைப்புகளுக்கு இணையானவை. ஒவ்வொரு கிராமத்திலும் மருத்துவமனை உண்டு. மருத்துவர்கள்/ செவிலியர்கள்/பரிசோதனை கூடம் உண்டு. மிக முக்கியமாக கிராம மற்றும் வட்ட அளவில் மருத்துவமனைகளை உள்ளாட்சி அமைப்புகள் நிர்வகிக்கின்றன. இதன் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட உள்ளாட்சி அமைப்புகளும் மருத்துவ துறையும் ஒருங்கிணைந்து செயல்படுவது சாத்தியமானது.

இந்த சூழல் சில நாட்களில் உருவானது அல்ல! பல ஆண்டுகளாக மார்க்சிஸ்ட் கட்சியின் தலைமையிலான இடதுசாரி அரசாங்கங்கள் திட்டமிட்டு நிதி மற்றும் மனிதவள முதலீடு செய்தன. இது தொடங்கியது 1957ம் ஆண்டு தோழர் இ.எம்.எஸ். ஆட்சியில்! இடையில் வந்த காங்கிரஸ் தலைமையிலான அரசாங்கங்கள் இந்த திசை வழியை மாற்றவில்லை அல்லது மாற்ற அனுமதிக்கப்படவில்லை.

இந்த வலுவான, தரமான சுகாதார கட்டமைப்புதான் இன்று வைரசுக்கு எதிரான போராட்டத்தில் அடிப்படையாக இருந்து உதவியுள்ளது.

வைரஸ் எதிர்ப்பு போர் மக்கள் இயக்கமாக!

சுகாதார கட்டமைப்பு மட்டுமே வைரசை கட்டுப்படுத்த இயலாது. உதாரணத்திற்கு தமிழகத்திலும் கட்டமைப்பு மோசம் என கூற இயலாது. இன்னும் சொல்லப்போனால் கேரளாவைவிட தமிழகத்தில் அரசு மருத்துவமனைகள் அதிகம். எனினும் அந்த கட்டமைப்பை பயன்படுத்த வைரஸ் எதிர்ப்பு போரில் மக்கள் ஈடுபடுத்தப்பட வேண்டும். அது தமிழகத்தில் நடக்கவில்லை; கேரளாவில் நடந்தது.

ஒவ்வொரு உள்ளாட்சி அமைப்பும் அதன் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் முன்களப் போராளிகளாக செயல்பட்டனர். தமது எல்லையினுள் உள்ள மக்களை அணுகுவது/ வெளியூரிலிருந்து வந்தவர்களை கண்காணிப்பது, அவர்களுக்கு உதவுவது போன்ற பணிகளை உள்ளாட்சி அமைப்புகள் செவ்வனே செய்தன. தினசரி மக்களுடன் தொடர்பில் இருந்ததால் அவர்கள் மக்களின் ஒத்துழைப்பை பெற முடிந்தது.

உதாரணத்திற்கு ஒரு கிராம உள்ளாட்சி தனிமனித இடைவெளியை உத்தரவாதப்படுத்த குடைகளை பயன்படுத்த முன்வந்தது மட்டுமல்ல; குடைகளை மக்களுக்கு மானிய விலையில் கொடுத்தது. இத்தகைய முன்கையெடுப்பு வைரஸ் எதிர்ப்பு போரில் மிக முக்கியம்!

அனைத்து உள்ளாட்சி அமைப்புகளும் இடதுசரிகளின் கைகளில் இல்லை. காங்கிரஸ் கூட்டணி கட்சிகளும் கணிசமாக உள்ளாட்சி அமைப்புகளில் உண்டு. களத்தில் இடதுசாரி கட்சிகளும் காங்கிரஸ் கூட்டணி கட்சிகளும் இணைந்தே செயல்பட்டன. சில இடங்களில் மக்களிடமிருந்து தனிமைப்படுவதை தவிர்க்க பா.ஜ.க.வும் இணைந்தது என பத்திரிக்கைகள் குறிப்பிடுகின்றன. மாநில அளவில் காங்கிரஸ் விமர்சனம் கூறினாலும் கீழ்மட்ட களத்தில் கட்சி வேறுபாடின்றி பணிகள் நடந்தன.

கேரளாவின் குடும்பஸ்ரீ குழுக்களும் வாலிபர்/மாதர்/மாணவர் வெகு மக்கள் அமைப்புகளும் களத்தில் தன்னலம் கருதாது குதித்தனர். முகக்கவசம், கிருமிநாசினி தயாரிப்பு/ சமுதாய சமையலறைகள்/ இந்த சமையலறைகளுக்கு காய்கறிகள் சேகரிப்பு போன்ற பல பணிகளில் இந்த அமைப்புகள் ஈடுபட்டன. உணவு பொருட்களும் மருந்துகளும் வீடுகளுக்கு நேரில் சென்று தர 2.75 இலட்சம் பேர் கொண்ட தன்னார்வலர் குழுக்கள் உருவாக்கப்பட்டன. இதிலும் வெகு மக்கள் அமைப்புகள் பங்கு முக்கியமானது. அரசாங்கத்தின் வழிகாட்டுதல்களை மக்கள் பின்பற்றினர். எங்கும் வன்முறை இல்லை; காவல்துறை கெடுபிடி இல்லை. மருத்துவ ஊழியர்களுக்கு எதிரான பாகுபாடு இல்லை.

தமிழகத்தில் என்ன நடந்தது? அனைத்து கட்சி ஒருங்கிணைப்புக்கு எந்த முயற்சியும் இல்லை. எதிர்க்கட்சி தலைவர்கள் என்ன மருத்துவர்களா? எனும் அகங்காரம்தான் வெளிப்பட்டது.

<u>சிறந்த அரசியல் தலைமையும் சீரிய நிர்வாக எந்திரமும்</u>

கோவிட் வைரஸ் போன்ற பேரிடர் காலத்தில் நிர்வாக அமைப்பு செவ்வனே செயல்படுவது அவசியம். ஆனால் நிர்வாக இயந்திரம் மட்டுமே வெற்றியை ஈட்டாது. உதாரணத்திற்கு தமிழக நிர்வாக இயந்திரம் சிறந்ததுதான்! தமிழகம் இந்த அளவிற்காவது தாக்குபிடித்தது எனில் அதற்கு காரணம் இங்கு இருந்த நிர்வாக அமைப்புதான்! ஆனால் இந்த நிர்வாக இயந்திரம் சிகப்பு நாடாவில் மாட்டிக்கொள்ளாமல் இருக்க வேண்டும் எனில் சிறந்த அரசியல் தலைமை தேவை. அது தமிழகத்தில் இல்லை. கேரளத்தில் இருந்தது.

கேரளாவின் அரசியல் தலைமை என வெளி உலகம் அறிந்த இரண்டு தலைவர்கள் முதல்வர் பினராயி விஜயன் மற்றும் சுகாதர அமைச்சர் ஷைலஜா டீச்சர் ஆவர்! இவர்களின் பங்கு மிக முக்கியமானது. எனினும் அவர்களுடன் பல அரசியல் ஆளுமைகளும் செயல்பட்டன. நிதி அமைச்சர் தாமஸ் ஐசாக் உட்பட அமைச்சர்கள் அனைவரும் மட்டுமல்ல; மாநில செயலாளர் கொடியேரி பாலகிருஷ்ணன் தொடங்கி ஏராளாமான கட்சி தலைவர்களும் ஊழியர்களும் இந்த கூட்டு முயற்சியின் பிரிக்க முடியாத அம்சம்.

இந்த கூட்டு முயற்சிதான் பல மாநிலங்கள் என்ன செய்வது என சிந்திப்பதற்கு முன்பே கேரளம் களத்தில் அமலாக்குவதில் சாத்தியப்படுத்தியது. அவற்றில் சில;

- மார்ச் 10ம் தேதியே ஊரடங்கு
- தொற்று நோய் சிறப்பு சட்டம்
- ரேபிட் டெஸ்ட் எனும் விரைவு பரிசோதனை
- பிளாஸ்மா சிகிச்சை
- வெளிநாடுகளில் இருந்த கேரளா மக்கள் ஊர்திரும்பும் பொழுது தனிமைப்படுத்த 2.5 இலட்சம் படுக்கைகள்
- காலியாக இருந்த கட்டடங்களும் படகுகளும் மருத்துவமனைகளாய் மாற்றம்
- அலைபேசி நிறுவனங்களுடன் பேசி கூடுதல் இணையதள வசதி
- வெளிநாடுகளிலிருந்து வருவோருக்கு பி.எஸ்.என்.எல். சிம் கார்டுகள்
- வெளிநாட்டில் உள்ள கேரள மக்களுக்கு டெலி மெடிசின் எனும் மருத்துவ ஆலோசனை
- 1400 சமுதாய சமையல் கூடங்கள்
- இடம் பெயர் தொழிலாளர்களுக்கு 19,000 முகாம்கள்
- மருத்துவ கண்காணிப்புக்கு  அலைபேசியில் பல செயலிகள்

இவையெல்லாம் கேரளா அரசாங்கம் அமலாக்கிய முதன்மைகள்!

மருத்துவ பாதுகாப்பை உத்தரவாதப்படுத்திய பொருளாதார பாதுகாப்பு

மேற்கண்ட அனைத்து முயற்சிகளும் வெற்றி அடைந்தன எனில் அதற்கு மிக முக்கிய காரணம் கேரளா அரசாங்கம் அறிவித்த ரூ 20,000 கோடி பொருளாதார திட்டம்தான். வேறு எந்த மாநிலமும் இந்த அளவிற்கு செய்யாத நிவாரணம் மட்டுமல்ல; மோடி அரசாங்கம் முற்றிலும் புறக்கணித்த அம்சம் பொருளாதார பாதுகாப்பு ஆகும். உணவு இல்லை எனில் ஊரடங்கு மீறும்

சூழல் உருவாகும் என்பதை கேரளா அரசாங்கம் தெளிவாக உணர்ந்து இருந்தது. எனவேதான் இந்த பொருளாதார திட்டம்!

கேரளாவின் நிதி நிலைமை மோசமாக இருந்த பொழுதும் அரசாங்கம் இந்த முயற்சிகளை எடுத்தது. மோடி அரசாங்கம் உதவ முன் வராத சூழலில் வெளிச்சந்தையிலிருந்து 9% வட்டிக்கு கடன் வாங்கியுள்ளது கேரள அரசாங்கம்.

ஏன்?

“கேரளாவில் உணவு  இல்லை என ஒருவருக்கும் சூழல் இருக்கக்கூடாது என்பதே அரசாங்கத்தின் குறிக்கோள்” என்றார் முதல்வர் பினராயி விஜயன்.

# கொரோனாவும் கூட்டாட்சி தத்துவமும்

**கே. பாலகிருஷ்ணன்**

மாநிலச் செயலாளர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

அதிகாரங்களை பகிர்ந்து அளிப்பதே ஜனநாயக அரசுகளின் அடிப்படைக் கூறாகும்.  இதை கவனத்தில் கொண்டே, இந்திய அரசியல் அமைப்பு சட்டம் உருவாக்கும்போது இந்தியாவை "மாநிலங்களின் ஒன்றியம்" என வரையறை செய்யப்பட்டது.   இந்தியாவின் பன்முகத்தன்மை, வேற்றுமையில் ஒற்றுமை என்ற கூட்டாட்சி தத்துவத்தின் அடிப்படையில் மத்திய அரசுக்கான அதிகாரங்களை கொண்ட மத்திய அரசு பட்டியல் எனவும், மாநிலங்களின் அதிகாரங்களைக் கொண்ட மாநில பட்டியல் எனவும் இரண்டு அரசுகளின் இணைந்து கவனிக்கிற ஒத்திசைவு பட்டியல் என்ற பொதுப்பட்டியல் கொண்டதாக அரசியல் சாசனம் வடிவமைக்கப்பட்டது.

விடுதலைப்போராட்ட காலத்தில் விவாதிக்கப்பட்ட கிராமராஜ்யம் என்ற கோட்பாட்டுக்கு வடிவம் கொடுக்கும் வகையில் இந்திய அரசியல் சட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட 73 மற்றும் 74வது திருத்தங்களின்படி உள்ளாட்சி அமைப்புகளுக்கு அதிக அதிகாரங்கள் அளிக்க வழி செய்யப்பட்டது. இது மூன்றாவது ஆட்சி முறை என வரையறை செய்யப்பட்டது.

மாநிலங்களின் ஒன்றியம் இந்தியா என அழைக்கப்பட்டாலும், மத்திய அரசுக்கு கூடுதல் அதிகாரங்களை வழங்கும் வகையிலேயே அரசியல்

அமைப்பு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அரசியல் அமைப்பு சட்டத்தால் வழங்கப்பட்ட குறைந்தபட்ச மாநிலங்களுக்கான அதிகாரங்களைக்கூட இதுவரை மத்தியில் ஆட்சியில் இருந்தவர்கள் வழங்கியதாக வரலாறு இல்லை. மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கோரும் பல மாநில கட்சிகள்கூட தங்களது ஆட்சிக்காலத்தில் உள்ளாட்சி அமைப்புகளுக்கு அதிகாரங்களை பகிர்ந்து அளிக்க மறுத்துவிட்டன. நடைமுறையில் மூன்றாவது ஆட்சிமுறை என்பது சொல்லாட்சியாகவே உள்ளது. அதிலும், மத்தியில் ஆட்சி பொறுப்புக்கு வந்துள்ள பாஜக மாநில உரிமைகளை பறித்து ஒரு ஒற்றை ஆட்சி முறையை உருவாக்கும் நோக்கோடு அனுதினமும் செயல்பட்டு வருகிறது.

தற்போது உலகம் சந்தித்து வரும் கொரோனா கொடுமையை எதிர்த்த போராட்டத்திலும் மத்திய பாஜக அரசு அரசியல் சட்டத்தின் அடிப்படைக்கே விரோதமாக, கூட்டாட்சி தத்துவத்தை தவிடுபொடியாக்கும் வகையில், மாநிலங்களின் உரிமைகளை பறித்து வருவதை கண்கூடாக காண முடியும்.

கண்ணுக்கு தெரியாத கொரோனா கிருமி தாக்குதலால் உலகமே முடங்கிக் கிடக்கிறது. இதன் ஒரு பகுதியாக ஒட்டுமொத்த இந்திய நாடும் கடந்த 50 நாட்களாக பொது முடக்கத்தால் செயலற்று இருக்கிறது. நாட்டில் அடிப்படையான தொழில், தொழில் உற்பத்தி, விவசாய உற்பத்தி, வணிகம், அனைத்து வகையான போக்குவரத்து, கட்டுமானம், விளையாட்டு, சினிமா, கலை இலக்கியம், நீதிமன்றம் உள்ளிட்ட அனைத்து துறைகளும் இயங்கவில்லை. 140கோடி மக்களும் தங்கள் வீடுகளிலேயே முடங்கிக்கிடக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. முன்னெப்போதும் இல்லாத இத்தகைய கொடூர நிலைமையில் பொருளாதார பாதிப்புகளில் மூழ்கியுள்ள மக்களைப் பாதுகாப்பது, அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வது, பசி பட்டினியில் இருந்து மக்களைப் பாதுகாப்பது, ஏற்பட்ட பொருளாதார இழப்புகளை ஈடுசெய்வது போன்ற கேந்திரமான பணிகளின் மூலம் மக்களைப் பாதுகாக்கும் பெரும் பொறுப்பு மத்திய, மாநில அரசுகளிடம் உள்ளது. நோய்த் தொற்று பரவாமல் தடுப்பதற்கும், தொற்று குறித்த சோதனைகளை மேற்கொள்வதற்கும், கொரோனா தொற்றால் பாதிக்கப்பட்டவர்களை மருத்துவமனையில் உரிய சிகிச்சை அளிப்பது உள்ளிட்ட கூடுதலான பணிகளை அரசுகள் நிறைவேற்ற வேண்டிய பெரும் சுமை ஏற்பட்டுள்ளது.

இத்தகைய கடமைகளை நிறைவேற்றி மக்களைக் காப்பாற்றும் பொறுப்பு மத்திய, மாநில அரசுகளுடையது என்றபோதும், நேரடியாக மக்களோடு

நெருக்கமான தொடர்பில் உள்ள மாநில அரசுகளின் மேல் விழுந்துள்ளது. மாநில அரசுகள் மேற்கண்ட இமாலய பணிகளை நிறைவேற்ற வேண்டுமெனில் வழக்கமான நிதி ஆதாரம் மட்டுமின்றி கூடுதலான நிதி அளித்தால் மட்டுமே இப்பணிகளை நிறைவேற்ற முடியும். நாடு சந்திக்கும் இந்த இக்கட்டான சூழ்நிலையில் மாநில அரசுகளுக்கு மத்திய அரசு, நிதி, உணவுப்பொருள் உள்ளிட்ட அனைத்தையும் தாராளமாக வழங்குவதின் மூலமே கொரோனாவை எதிர்த்தப் போராட்டத்தில் இந்திய நாடு வெற்றிபெற முடியும்.

ஆனால், மோடி தலைமையிலான மத்திய அரசு இக்கடமைகளை நிறைவேற்றுவதில் நியாயமாக நடந்துகொண்டுள்ளதா? அரசியல் சட்டம் வழங்கியுள்ள கூட்டாட்சி கோட்பாட்டின் அடிப்படையில் செயல்பட்டுள்ளதா? என்பதே இப்போதைய கேள்வி ஆகும். மேலோட்டமாக ஆய்வு செய்து பார்த்தாலே மோடி அரசின் அணுகுமுறை கூட்டாட்சி தத்துவத்துக்கு விரோதமானது; மாநில உரிமைகளை பறிப்பது என்பது மட்டுமின்றி, மாநிலங்களையே இல்லாததாக்குவது என்பதாக, முழுமையான அரசியல் சட்டத்துக்கு விரோதமானதாக உள்ளது என்பதைக் காண முடியும்.

**ஊரடங்கு உத்தரவுகள்**

கொரோனா தொற்று பரவாமல் தடுப்பதற்கு தனித்திருப்பது, தனி நபர் இடைவெளி கடைப்பிடிப்பது அவசியமான ஒன்றாகும். எனவே, இதுவரை அறிவிக்கப்பட்ட 4 ஊரடங்கு உத்தரவுகளையும் இந்திய நாட்டு மக்கள் முழுமனதோடு ஏற்று அதற்கு முழு ஒத்துழைப்பு அளித்து வந்துள்ளார்கள். அனைத்து அரசியல் கட்சிகளும் ஊரடங்கு உத்தரவினை எதிர்த்து கருத்து தெரிவிக்காமல் மக்கள் ஒத்துழைக்க வேண்டுமென வேண்டுகோள் விடுத்தனர். ஆனால், இந்த பரவல் தொற்று நோய் தொடர்பாக ஊரடங்கு உத்தரவினை பிறப்பிப்பதற்கு மத்திய அரசுக்கு இந்திய அரசியல் சட்டத்தின்படி அதிகாரங்களே இல்லை என்பது வெள்ளிடைமலை.

ஒவ்வொரு முறை ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கும்போதும் பேரிடர் மேலாண்மை சட்டம் 2005இன்படி பல விதிமுறைகளை உருவாக்கி அதை செயல்படுத்த வேண்டுமென மாநில அரசுகளின் மீது மத்திய அரசு அழுத்தம் தருகிறது. இந்த விதிமுறைகளை மாற்றவோ, திருத்தவோ கூடாது எனவும் கட்டாயப்படுத்தி வருகிறது. இந்த விதிகளை உருவாக்கி நாடு முழுவதும் அமலாக்க வேண்டுமென கட்டாயப்படுத்துவதன் மூலம் நோய் எதிர்ப்பு என்ற பெயரில் மத்தியத்துவப்படுத்தப்பட்ட அணுகுமுறையினை உருவாக்கி மாநில அரசுகளை, அவைகளை நிறைவேற்றுகிற ஒரு நிர்வாக அமைப்பாக

மாற்றிவிட்டது மோடி அரசு. மூன்றாவது முறையாக ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டபோது, நாடு முழுவதும் உள்ள மாவட்டங்களை சிவப்பு, ஆரஞ்சு, பச்சை என பிரித்து பட்டியலை மத்திய அரசு வெளியிட்டது. இவ்வாறு செய்யும்போது மாநில அரசுகளை குறைந்தபட்சம்கூட கலந்து பேசவில்லை.

சில மாநில அரசுகள், தங்கள் மாநிலங்களில் சிவப்பு மாவட்டங்களாக பட்டியலிடப்பட்டதை எதிர்த்து குரல் எழுப்பின. சில மாநிலங்களில் பெரிய பரப்பளவை கொண்ட சில மாவட்டங்களை சிவப்பு மாவட்டங்களாக அறிவித்ததை ஏற்க முடியாது என மறுத்தன. இத்தகைய பெரிய மாவட்டங்களில் கொரோனா பாதித்த குறிப்பிட்ட சில பகுதிகளை மட்டும் சிவப்பு பகுதியாக அறிவிக்காமல் ஒட்டுமொத்த மாவட்டத்தையே முடக்கி வைப்பது அவசியமற்றது என்பது மட்டுமின்றி அவ்வாறு செய்வது பொருளாதார நெருக்கடிக்கு வித்திடும் என கருத்து தெரிவித்தன. ஆனால், மத்திய அரசு, மாநில அரசுகளின் இந்த நியாயமான கோரிக்கைகளைக்கூட பரிசீலனைக்கு ஏற்றுக்கொள்ளவில்லை. ஆக, பேரிடர் மேலாண்மை சட்டத்தின் அடிப்படையில் தாங்கள் மேற்கொண்ட விதிகளில் சிறிய மாற்றத்தைக்கூட செய்வதற்கு மத்திய அரசு இசைவு தெரிவிக்கவில்லை. இதுமட்டுமின்றி கேரள அரசு வெற்றிகரமாக கொரோனா பாதிப்பை கட்டுப்படுத்தியுள்ள நிலையில் சில ஊரடங்குக் கட்டுப்பாடுகளை தளர்த்தலாம் என அறிவித்தபோது உள்துறை அமைச்சகம் கேரள அரசுக்கு கடும் கண்டனம் தெரிவித்து அதை அனுமதிக்கவில்லை.

அதேசமயம், பிரதமர் நரேந்திர மோடி நான்கு முறை ஊரடங்கு உத்தரவுகளை பிறப்பித்துள்ளார். இவ்வாறு பிரதமர் ஊரடங்கினை அறிவிப்பது, அரசியல் சட்டத்துக்குப் புறம்பானது என்பது மட்டுமல்ல, மக்களுக்கும் பெருந்தொல்லைகள் அளித்துள்ளது. மாநிலங்களுடன் கலந்து பேசாமல், எந்த முன்தயாரிப்பும் இல்லாமல், அதிரடியாக ஊரடங்கை அறிவிப்பதால், இந்திய நாட்டு மக்கள் எண்ணில் அடங்காத கொடுமைகளை சந்தித்து வருகின்றனர். உதாரணமாக பிரதமர் மார்ச்-24 ஆம் தேதி, காணொலி காட்சியில் தோன்றி, அதிரடியாக 21 நாட்களுக்கு ஊரடங்கு உத்தரவு என அறிவித்தார். அதன் பின்னரும் தொடர்ந்து ஊரடங்கு நீடிப்பு செய்து அறிவிக்கப்பட்டது. அதிரடியாக ஊரடங்கு அறிவித்த காரணத்தால் பலகோடி புலம்பெயர்ந்த தொழிலாளர்கள், கல்வி, தொழில், வியாபாரம், சுற்றுலா போன்றவைகளுக்காக பல மாநிலங்களுக்கு சென்றவர்கள் ஊர்திரும்ப முடியாமல் பெரும் அவதிக்கு உள்ளானார்கள். மாநிலத்துக்கு உள்ளேயே பல

காரணங்களுக்காக வெளி மாவட்டங்களுக்கு சென்றவர்கள் வீடு திரும்ப முடியாமல் சிக்கிக் கொண்டார்கள். அன்றாட தேவைகளை பூர்த்தி செய்வதற்கும், உணவு உள்ளிட்ட அத்தியாவசியத் தேவைகளுக்கு எந்த ஏற்பாடும் செய்துகொள்ள முடியாமல் மக்கள் விழி பிதுங்கி நின்றனர்.

பிரதமர் அறிவிப்பதற்கு முன்னரே ஊரடங்கினை மாநிலங்களின் சில பகுதிகளில் சம்பந்தப்பட்ட முதலமைச்சர்கள் அறிவித்த இடங்களில் இந்த நெருக்கடிகள் ஏற்படவில்லை. இதைப்போல முழு ஊரடங்கினை மாநில முதலமைச்சர்கள் மூலம் அறிவிக்கிற ஏற்பாட்டினை பிரதமர் செய்திருந்தால் ஊரடங்க காலத்தில் மக்கள் அனுபவித்த துன்ப துயரங்கள், நெருக்கடிகள் பெரும்பகுதி தவிர்த்திருக்க முடியும்.

ஒருவேளை, கொரோனாவை எதிர்த்த போராட்டத்தை வீரியத்துடன் நடத்த வேண்டுமென்ற அக்கறையில் பாரதப்பிரதமர் இத்தகைய ஊரடங்கினை அறிவித்தார் என வாதிடக்கூடும். ஆனால், இது உண்மைக்கு மாறானது. பிப்ரவரி மாதமே உலகின் பல நாடுகளில் கொரோனா தொற்று ஏற்பட்டதன் காரணமாக அந்நாட்டு அரசுகள் ஊரடங்கு உள்ளிட்ட பல நடவடிக்கைகளை மேற்கொண்டபோது, மோடி அமெரிக்க ஜனாதிபதி டிரம்ப் வருகைக்கான ஏற்பாடுகளில் மூழ்கி இருந்தார். பிப்ரவரி மாத கடைசியில் கொரோனா வேகமான தாக்கத்தை ஏற்படுத்தியிருந்த நிலையில், மோடி குஜராத்தில் உருளைக்கிழக்கு விவசாயிகள் மாநாட்டில் பேசிக்கொண்டிருந்தார். கொரோனாவுக்கான மருத்துவ உபகரணங்களுக்கு பல நாடுகள் அல்லாடிக்கொண்டிருந்தபோது, சீனாவுக்கு மருத்துவ உபகரணங்களை அனுப்பி வைத்தேன் என பெருமை பேசிக்கொண்டிருந்தார். மார்ச் மாதம் கேரளாவில் சில மாவட்டங்களில் ஊரடங்கு அறிவிக்கப்பட்டபோது, மத்தியப் பிரதேச மாநிலத்தில் ஆட்சி மாற்றத்துக்கான ரசவாத பணிகளில் ஈடுபட்டிருந்தார். உண்மையில், பிரதமர் மோடிக்கு கொரோனா குறித்த அக்கறை இருந்திருக்குமேயானால், பிப்ரவரி மாதத்திலேயே மாநிலங்களை உஷார்படுத்தி, தடுப்பு நடவடிக்கைகளை தீவிரப்படுத்தி இருக்க முடியும். இதன் மூலம், கொரோனா வைரஸ் தொற்றை தொடக்கத்திலேயே தடுத்திருக்க முடியும் என்பதோடு, நீடித்த ஊரடங்குகள்கூட அவசியம் இல்லை என்ற நிலையை உருவாக்கியிருக்க முடியும்.

இதில் இன்னொரு முக்கியமான அம்சமும் உள்ளது. "பேரிடர் மேலாண்மை சட்டம்-2005" என்பது பலவிதமான பேரிடர்கள் குறித்த வரையறுப்புகளைக் கொண்ட சட்டமாகும். இச்சட்டத்தில் பெருந்தொற்று (epidemic) நோய்கள் இடம்பெறவில்லை. ஆனால், மத்திய அரசு, இந்த சட்டத்தின்கீழ்

கோவிட்-19க்கான விதிகளை உருவாக்கி, அதை மாநில அரசுகளின் தலைகளில் திணித்து அமலாக்கக் கோருவது அரசியல் சட்டத்துக்கே விரோதமானதாகும். இது மட்டுமின்றி, பொது சுகாதாரம், நோய், மருத்துவம் ஆகிய இத்துறைகள் அனைத்தும் மாநில அரசுகளின் அதிகார எல்லைக்குள் உள்ளதாக அரசியல் சட்டம் வகுத்து அளித்துள்ளது. மாநில அரசுகளின் அதிகாரங்களுக்கு உட்பட்ட துறைகளில், மாநில அரசுகள் மட்டுமே விதிகள், உத்தரவுகள், நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும். இத்துறைகளில் எந்த சூழ்நிலையிலும் மத்திய அரசு மூக்கை நுழைக்கக் கூடாது.

உச்சநீதிமன்றம் வழங்கியுள்ள பல்வேறு தீர்ப்புகளில் இந்திய அரசியல் சாசனத்தின் கூட்டாட்சி கோட்பாட்டில் மத்திய அரசு கூடுதலான அதிகாரங்களைக் கொண்டிருந்த போதிலும், மாநிலங்கள் சுயாதிபத்திய உரிமை கொண்டதென அழுத்தமாக குறிப்பிட்டுள்ளது. இதன் அர்த்தமென்னவெனில், மாநிலங்களுக்கு வகுத்தளிக்கப்பட்டுள்ள உரிமைகளில் மத்திய அரசு தலையிடுவது அரசியல் சட்ட அடிப்படைக்கு விரோதமானது என்பதே. ஆனால், கோவிட்-19 என்ற பெருந்தொற்று பரவல் நோய் குறித்த அனைத்து நடவடிக்கைகளும்.. அதாவது நோய் தடுப்பு, மருத்துவ சிகிச்சை, சுகாதாரப்பணிகள் உள்ளிட்டவைகளில் உத்தரவுகளை பிறப்பிக்கவும், அரசாணைகளை பிறப்பித்து செயல்படுத்தவும், மாநில அரசுகளே அதிகாரம் கொண்டவைகளாகும். இந்த சட்ட வரம்புகளை மீறிய மத்திய மோடி அரசு, கோவிட்-19 தொடர்பான விதிகளை உத்தரவுகளாக பிறப்பித்து செயல்படுத்தி வருகிறது.

## பெருந்தொற்று நோய்கள் சட்டம்

பெருந்தொற்று பரவல் நோய் மீதான அனைத்து நடவடிக்கைகளும் மேற்கொள்வதற்கான ஒரு சட்டம் பிரட்டிஷ் அரசால் நிறைவேற்றப்பட்டு, இன்றும் அது அமலில் உள்ளது. இச்சட்டத்திற்கு "பெருந்தொற்று நோய்கள் சட்டம்-1897 (Epidemic diseases Act-1897) "என அழைக்கப்படுகிறது. சுமார் 120 ஆண்டுகளை கடந்துவிட்டதால் இச்சட்டம் அமலில் இருக்க வாய்ப்பில்லை என சிலர் கருதக்கூடும். ஆனால், உண்மை என்னவெனில் இப்போதும் இச்சட்டம் அமலில் இருப்பதும், இச்சட்டத்தை பயன்படுத்தி சில மாநில அரசுகள் கோவிட்-19 காலத்தில் ஊரடங்கினை பிறப்பித்துள்ளதும் கவனிக்கத்தக்கது. மோடி அரசு ஊரடங்கினை பேரிடர் மேலாண்மை சட்டம் 2005ஐ பயன்படுத்தி கோவிட்-19 காலத்தில் முதன்முறையாக மார்ச்-22ல் ஊரடங்கு பிறப்பிப்பதற்கு முன்னாலேயே கேரள அரசு பெருந்தொற்று நோய்கள் சட்டம்-1897ஐ பயன்படுத்தி கேரளாவின்

சில பகுதிகளில் ஊரடங்கு உத்தரவினை பிறப்பித்தது. இதேபோல, இதர சில மாநிலங்களும் இச்சட்டத்தை பயன்படுத்தி தங்கள் மாநிலத்தில் ஊரடங்கினை பிறப்பித்துள்ளன.

இச்சட்டம் பெருந்தொற்று நோய், பரவல் நோய் உள்ளிட்ட நோய்கள் மீதான நடவடிக்கைகளை மாநில அரசுகள் மேற்கொள்வதற்கென்றே உருவாக்கப்பட்ட சட்டமாகும். கடந்த பல்லாண்டுகளில் இச்சட்டத்தின்படியே நோய் தொற்று எதிர்ப்பு நடவடிக்கைகளை மாநில அரசுகள் மேற்கொள்வதும், அந்நடவடிக்கைகளுக்கு மத்திய அரசு ஊக்கமளிப்பதும் நடைமுறையில் இருந்து வருகிறது- இச்சட்டத்தில், மத்திய அரசுக்கு ஒரு வாய்ப்பு மட்டும் அளிக்கப்பட்டுள்ளது. அதாவது, பெருந்தொற்று பரவல் நோய் ஏற்பட்ட காலங்களில் நாட்டில் இருந்து வெளிநாடுகளுக்கு செல்வோரையும், வெளிநாடுகளில் இருந்து உள்நாட்டுக்கு வருவதையும், மாநிலங்களுக்கு இடையில் பயணிப்பவர்களையும் கண்காணித்து முறைப்படுத்துவதற்கான பணிகளை மட்டுமே மத்திய அரசு செய்ய முடியும்.

ஆனால், மோடி தலைமையிலான மத்திய அரசு மேற்கண்ட சட்டங்களுக்கு விரோதமாக மாநில அரசுகளின் இறையாண்மையை தவிடுபொடியாக்கி, மத்திய அரசுக்கு சம்பந்தம் இல்லாத கோவிட்-19 பெருந்தொற்று பரவல் தொடர்பாக அனைத்து விதிமுறைகளையும் உருவாக்கி மாநில அரசுகளின் மீது திணித்து வருகிறது. இத்தகைய நடவடிக்கைகள், பகிரங்கமாக அரசியல் சட்டத்தை மீறுவது என்பதோடு, கூட்டாட்சி தத்துவத்துக்கு சமாதி கட்டுவதுமாகும்.

**<u>பிஎம்-கேர்</u>**

கோவிட்-19ஐ பயன்படுத்தி, பிரதமர் மோடி தலைமையில் பிஎம்-கேர் என்ற புது நிதி திரட்டுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. நாடு விடுதலை அடைந்தது முதல் இத்தகைய இடர்ப்பாடு காலங்களில் உதவி செய்வதற்கென பிரதம மந்திரி நிவாரண நிதி என்ற திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது. இதற்கு மாறாக, இந்த புதிய திட்டத்தினை மோடி அரசு உருவாக்கி உள்ளது. இந்நிதியினை பராமரிப்பதற்கும், முறைப்படுத்துவதற்கும், தணிக்கை செய்வதற்குமான ஏற்பாடுகள் எதுவும் வெளிப்படையாக தெரிவிக்கப்படவில்லை. 70 ஆண்டுகளுக்கு மேலாக பிரதம மந்திரி நிவாரண நிதி அமலில் இருக்கும்போது, இத்தகைய புதிய திட்டம் ஏன் என்ற கேள்விக்கு நியாயமான பதிலும் அளிக்கப்படவில்லை. இந்த நிதி திரட்டல் ஏற்பாட்டிலும் மாநிலங்கள் வஞ்சிக்கப்படுகின்றன. தொழில் நிறுவனங்கள்

தங்களது லாபத்தில் 2%ஐ சமூக சேவை திட்டங்களுக்கு(சிஎஸ்ஆர்) செலவழிக்க வேண்டும் என்ற விதி உள்ளது. இந்த சிஎஸ்ஆர் நிதியை கம்பெனி நிர்வாகங்கள் புதிதாக துவக்கப்பட்டுள்ள பிஎம்-கேர் நிதிக்கு தாராளமாக அளிக்க அனுமதிக்கப்பட்டுள்ளது. ஆனால், அதே சமயம், மாநில முதலமைச்சர்கள் தலைமையில் உள்ள முதலமைச்சர் நிவாரண நிதிக்கு கம்பெனி நிர்வாகங்கள் இந்த சிஎஸ்ஆர் நிதியை அளிக்க தடை விதிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் அனைத்து மாநிலங்களிலும் உள்ள தொழில் நிறுவனங்கள் சிஎஸ்ஆர் நிதியை பிஎம்-கேர் நிதிக்கு மட்டுமே அளிக்க முடியும். நிதி பற்றாக்கறையில் தடுமாறும் மாநில அரசுகளுக்கு நிதி கிடைக்கும் வாய்ப்புகள் இதன் மூலம் தட்டிப்பறிக்கப்பட்டுள்ளன.

கொரோனா தொற்றுக்கான சோதனைகள், மருத்துவ கட்டமைப்புகளை பலப்படுத்துவது, மருத்துவர்கள், செவிலியர்கள், சுகாதாரப் பணியாளர்களுக்கு பாதுகாப்பு உபகரணங்கள் வழங்குவது, நோய் தொற்று பாதித்தவர்களுக்கு மருத்துவ சிகிச்சை அளிப்பது, மாநிலம் முழுவதும் தூய்மைப் பணிகளை மேற்கொள்வது போன்ற போன்ற அடுக்கடுக்கான பணிகளை கவனிக்க வேண்டிய கட்டாயம் மாநில அரசுகளுக்கு ஏற்பட்டது.

இன்னொரு பக்கம் ஊரடங்கு அறிவிக்கப்பட்டிருந்த நிலையில், வாழ்வாதாரத்தை இழந்த அனைத்துப் பகுதி மக்களுக்கும் உணவு, அடிப்படைத் தேவைகள் மற்றும் நிவாரணங்களை வழங்க வேண்டிய பெரும் பணிகளை சமாளிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இத்தகைய பணிகளை மேற்கொள்ள மாநில அரசுகளுக்கு அதிகப்படியான நிதி மற்றும் மருத்துவ உபகரணங்கள், அரிசி மற்றும் உணவுப்பொருட்கள் அனைத்தும் தேவை ஏற்பட்டன. நாட்டில் உள்ள மாநில அரசுகளும் இந்தத் தேவைகளை ஈடுகொடுக்க முடியாமல், மூச்சுத்திணறும் நிலையில் தள்ளாடிக் கொண்டிருந்தன. மருத்துவத் தேவைகளை ஈடுகொடுப்பதற்கும், மக்களின் வாழ்வாதார தேவைகளை ஈடுகொடுப்பதற்கும் தங்களது சொந்த நிதி ஆதாரத்திலிருந்து மாநில அரசுகள் ஓரளவுக்கே ஈடுகொடுக்க முடிந்துள்ளது. இதுவரை அறிவிக்கப்பட்டிருக்கிற மருத்துவ மற்றும் நிவாரண ஏற்பாடுகள், யானை பசிக்கு சோளப்பொறி இட்டது போலவே உள்ளன.

கொரோனா நோய் தொடர்பான மருத்துவப் பணிகளுக்கும் பொருளாதார இழப்பீடுகளை ஈடுசெய்வதற்கும் மத்திய அரசு மாநிலங்களுடன் இணைந்து அதிக நிதி அளிப்பதன் மூலமே கொரோனா பாதிப்பிலிருந்து மக்களைக் காப்பாற்ற முடியும். ஆனால் மத்திய மோடி அரசு மாநில அரசுகள் வற்புறுத்தி

பல முறை கோரிக்கை எழுப்பிய போதிலும் போதிய நிதி அளிக்க மறுத்துவிட்டது.

உதாரணமாக, தமிழக முதல்வர் தமிழகத்திற்கு ஏற்பட்டுள்ள நிதித்தேவை குறித்து ஏப்ரல் முதல் தேதி விரிவான கடிதம் ஒன்றை எழுதியிருந்தார். அக்கடிதத்தில் கொரோனா எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கு அனைத்து மாநிலங்களுக்கும் உடனடியாக ரூ. 1 லட்சம் கோடி ஒதுக்க வேண்டும் எனவும், அதில் தமிழ்நாட்டிற்கு ரூ. 9,000 கோடி அளிக்க வேண்டும் எனவும், அதே போல 20-21ஆம் ஆண்டிற்கு மாநில அரசுக்கு 33% கூடுதல் கடன் வாங்கிக் கொள்வதற்கு அனுமதி அளிக்க வேண்டுமெனவும், மருத்துவ உபகரணங்கள் வாங்குவதற்கு ரூ. 3000 கோடியும், நெல் கொள்முதல் செய்வதற்கு ரூ. 1321 கோடியும் தேசிய பேரிடர் நிதியிலிருந்து முன்பணமாக ரூ. 1000 கோடியும் கோரியிருந்தார். இது மட்டுமின்றி, ஏற்கனவே தமிழகத்திற்கு மத்திய அரசு வருவாய் பற்றாக்குறை மானியமாக 15வது நிதிக்குழுவின் சிபாரிசுப்படி ரூ. 4023 கோடியும் ஜிஎஸ்டி வரிப் பகிர்வில் மத்திய அரசு அளிக்க வேண்டிய பங்குத் தொகை மற்றும் உள்ளாட்சி அமைப்புகளுக்குக் கொடுக்க வேண்டிய தொகை போன்ற பல தலைப்புகளில் ரூ.16,400 கோடி அளித்திட வேண்டுமெனவும் தொடர்ந்து வற்புறுத்தப்பட்டு வந்துள்ளது.

ஆனால் மத்திய அரசு இதுவரையில் மாநில அரசுக்கு வழங்கியுள்ள மொத்தத் தொகை ரூ. 6,420 கோடி மட்டுமே. அதாவது வரிவருவாயில் மத்திய அரசின் பங்களிப்பாக ரூ. 1,928 கோடியும் வருவாய் பற்றாக்குறை மானியமாக ரூ. 402 கோடியும் 2019-2020 டிசம்பர் ஜிஎஸ்டி பங்களிப்பாக ரூ. 1,369 கோடியும் மாநில பேரிடர் நிவாரண நிதிக்காக ரூ. 510 கோடியும் கிராமப்புற சுகாதார திட்டங்களுக்காக ரூ. 312 கோடியும் மட்டுமே வழங்கப்பட்டுள்ளது. தமிழகத்துக்கு மத்திய அரசு ஏற்கனவே அளிக்க வேண்டிய பாக்கித் தொகையில் மூன்றில் ஒரு பங்குத் தொகையை மட்டுமே அளித்துள்ளது. இதில் வேதனை என்னவெனில், கொடூரமான கொரோனா தடுப்பு நடவடிக்கைகளுக்கு மத்திய அரசு ஒரு ரூபாய் கூட சிறப்பு நிதியாக வழங்கவில்லை என்பதுதான். மேலும் மாநில அரசு கடன் பெறுவதற்கான அனுமதியைக் கூட மத்திய அரசு வழங்க மறுத்து விட்டது.

மாநில அரசுகள் ஏற்கனவே நிதிநெருக்கடியில் சிக்கித் தவிக்கின்றன. நிதி வரவு-செலவில் பற்றாக்குறை ஏற்பட்டு கடனில் மூழ்கி வருகின்றன. தமிழக அரசின் கடன் சுமை நடப்பு ஆண்டோடு சேர்த்து ரூ. 4,56,000 கோடியாக உயர்ந்துள்ளது. ஒவ்வொரு ஆண்டும் வட்டிக்காக மட்டும் ரூ. 30,000 கோடி

வரை செலுத்த வேண்டியுள்ளது. நடப்பாண்டில் கொரோனா பாதிப்பால் மாநிலத்தில் சொந்த வருவாய் பெரும் பாதிப்புக்கு உள்ளாகும் நிலை ஏற்பட்டுள்ளது. தமிழக அரசின் சொந்த வரிவருவாய் உற்பத்தி இழப்புகளாலும் வியாபார மந்தத்தினாலும் பெரும் சரிவு ஏற்படும். பத்திரப் பதிவு, டாஸ்மாக் விற்பனை, பெட்ரோலிய பொருட்கள் மீதான வரி வருவாய் எதிர்பார்த்ததை விட சரிபாதியாகக் குறையும் என கணக்கிடப்பட்டுள்ளது.

அதேசமயம் கொரோனா தடுப்பு மற்றும் நிவாரண நடவடிக்கைகளால் மாநில அரசின் செலவினங்கள் உயர்ந்து கொண்டே வருகின்றன. உதாரணமாக, கொரோனா நிவாரண நடவடிக்கைகளுக்கு ரூ 3218 கோடி ஒதுக்கியதுடன் மருத்துவம், சுகாதாரப் பணிகளுக்கு கூடுதலான செலவுகளை மேற்கொண்டுள்ளது. ஒருபக்கம் நிதி நெருக்கடி இன்னொரு பக்கம் கூடுதல் நிதி செலவினங்கள் என்ற இருமுனைத் தாக்குதல்களுக்கு உள்ளாகியுள்ள மாநிலங்களுக்கு மத்திய அரசு உதவியினால் மட்டுமே மக்களைக் காப்பாற்ற இயலும். ஆனால் மத்திய அரசு கடைப்பிடித்து வரும் மாற்றாந்தாய்ப் போக்கு மாநில அரசுகளை முடக்கிப் போட்டுவிடும் ஆபத்தானதாகும்.

கொரோனா தொற்று ஏற்பட்டு மூன்றரை மாதங்கள் முடிந்துவிட்டன. ஐம்பது நாட்களுக்கு மேலாக ஊரடங்குகள் நீடித்துக்கொண்டிருக்கின்றன. இருந்தபோதிலும், கொரோனா நோய் பரவலை கட்டுப்படுத்துவதிலும், மருத்துவ சோதனைகள் நடத்துவதிலும், நோய் பாதிக்கப்பட்டவர்களுக்கு சிகிச்சை அளிப்பதிலும், இன்னொரு பக்கம் ஏற்பட்டுள்ள வேலையிழப்பு, தொழில் உற்பத்தி பாதிப்பு, ஏழை-நடுத்தர மக்களின் வாழ்வாதார இழப்புகளை மீட்டெடுப்பதிலும் மத்திய மாநில அரசுகள் பெரும் தோல்வியை சந்தித்துள்ளன.

இத்தகைய தோல்விக்கான அடிப்படை காரணங்களைக் கண்டறிய வேண்டும். உலகம் இதற்கு முன் கண்டிராத நோய்த் தொற்றால் பெரும் பாதிப்புகளை சந்தித்து வருகிறது. இதனை எதிர்கொள்ள உலகின் பல நாடுகள் கூடுதலான நிதியினை ஒதுக்கி மக்களைக் காக்கும் பணியில் ஈடுபட்டு வருகின்றன. உதாரணமாக, ஜப்பான் 71.1%, அமெரிக்கா 13%, ஸ்வீடன் 10%, பிரான்ஸ் 9.3%, ஸ்பெயின் 7.3% என தங்களது நாட்டின் மொத்த தேசிய உற்பத்தியில் இந்த விகிதங்களை ஒதுக்கியுள்ளன. ஆனால் 132 கோடி மக்களை கொண்ட இந்திய நாட்டில் பாஜக அரசு கொரோனா எதிர்ப்பு நடவடிக்கைகளுக்காக ஒதுக்கிய நிதி ரூ 1.7 லட்சம் கோடி மட்டுமே. அதாவது இந்திய நாட்டின் மொத்த தேசிய உற்பத்தியில் 1% கூட இல்லை. மேலும் ஏற்கனவே நிதிநிலை அறிக்கையில் அறிவிக்கப்பட்டு

அமுலாக்கப்பட்டு வரும் சில திட்டங்களுக்கான நிதியும் இந்தத் தொகையில் அடங்கும். அவைகளை நீக்கிவிட்டு கொரோனா எதிர்ப்பு நடவடிக்கைக்காக மட்டும் ஒதுக்கப்பட்ட தொகை 0.6% என நிபுணர்கள் தெரிவித்துள்ளதில் இருந்து கொரோனா எதிர்ப்புப் போராட்டத்தில் மோடி அரசின் அக்கறையைப் புரிந்து கொள்ள முடியும். இதற்கான அறிவிப்புகளில் மத்திய அரசே நேரடியான நிவாரண உதவிகளை பெயரளவிற்கு அறிவித்ததே தவிர, இத்தொகையில் மாநில அரசுகளுக்கான பங்கீட்டுத் தொகையாக ஏதும் வழங்கவில்லை.

கொரோனா தடுப்பில் படுதோல்வி அடைந்துவிட்ட நிலையில் மத்திய அரசு போதிய நிதி ஒதுக்கி நோய்த்தடுப்பு மற்றும் நிவாரண உதவிகள் வழங்கவில்லை என பொதுமக்கள் மத்தியில் கடும் கண்டனங்கள் எழும்பியுள்ள நிலையில் தற்போது ரூ. 20 லட்சம் கோடியை ஒதுக்கி உள்ளதாக மோடி  அறிவித்துள்ளார். இதற்கான நிவாரணத் திட்டங்கள் தவணை முறையில் நிதி அமைச்சரால் அறிவிக்கப்பட்டு வருகிறது. இந்த அறிவிப்புகளை எல்லாம் உற்று நோக்கினால் நேரடியாக மத்திய அரசு நிதி ஒதுக்கீடு செய்வதற்கு மாறாக வங்கிகளில் கடன் வழங்குவது; கடன் தவணை காலக்கெடுவை நீட்டிப்பது போன்ற வெற்று அறிவிப்புகளே அதிகம் இடம்பெற்றுள்ளன. நேரடியான நிவாரண நிதி எதையும் ஒதுக்காமல், ரூ. 20 லட்சம் கோடியை ஒதுக்கி விட்டதாக இமாலய கட்டுக்கதைகளை பிரதமர் மோடியால் மட்டுமே எழுத முடியும்.

இந்த நிலைமைக்கு மாறாக உண்மையிலேயே கையில் கிடைத்த அதிகாரங்களைக் கொண்டு கொரோனா பாதிப்பை வெற்றிகரமாக ஒரு மாநிலம் எதிர்கொண்டிருக்கிறது என்று சொன்னால் அது கேரளா மட்டும்தான். அங்கு மட்டும் இது எப்படிச் சாத்தியமானது? கொரோனா தொற்றுக்கு எதிரான நடவடிக்கைகளுக்காக ரூ. 20,000 கோடியினை ஒதுக்கியது மட்டுமின்றி அதில் சரிபாதி நிதியையும் அதிகாரங்களையும் உள்ளாட்சி அமைப்புகளிடம் அளித்தது என்பதுதான் கொரோனாவை வெற்றிகரமாக அந்த மாநிலம் எதிர்கொண்டதில் இருக்கும் சூட்சுமம் ஆகும். மாநில அரசின் அழைப்பை ஏற்று உள்ளாட்சி மன்றங்கள் மூலமாக செயல்படுத்தப்படும் திட்டங்களில் நேரடியாக மக்கள் பங்கேற்கிறார்கள். இந்த ஊரடங்கு காலத்தில் கேரளத்தில் 1400க்கும் மேற்பட்ட சமுதாய சமையல் கூடங்கள் அமைக்கப்பட்டு புலம்பெயர் தொழிலாளர்கள் உட்பட ஏழை, எளிய மக்கள் அனைவருக்கும் உணவு உறுதி செய்யப்பட்டது. இவற்றை நடத்துவது ஆங்காங்கே உள்ள உள்ளாட்சி மன்றங்கள்தான் என்பது

குறிப்பிடத்தக்கது. சுகாதாரப் பணிகள் முழுவதையும் உள்ளாட்சி அமைப்புகளே செய்கின்றன. பல நூற்றுக்கணக்கான கிராமங்களில் மாற்றுத்திறனாளிகள், மற்ற நோயாளிகளுக்கு பாதுகாப்பு மையங்களை உள்ளாட்சி மன்றங்களே ஏற்படுத்தின. இந்த நடவடிக்கைகளுக்கெல்லாம் மாநில அரசு உள்ளாட்சி மன்றங்களுக்கு நிதி உள்ளிட்ட ஏற்பாடுகளைச் செய்து தந்தது. கேரளத்தில் உள்ளாட்சி அமைப்பின் ஒரு பகுதியாகவே பெண்களின் மேம்பாட்டுக்கான குடும்பஸ்ரீ திட்டம் செயல்பட்டு வருகிறது. இந்த அமைப்பின் மூலமாக இன்னும் களத்தில் முழுமையாக உள்ளாட்சி அமைப்புகளால் செயல்பட முடிந்திருக்கிறது. இந்தியா முழுவதும் கொரோனா பரவலும் பாதிப்பும் தீவிரமடைந்துள்ள நிலையில், அதிகாரப்பரவல் மூலமாகத்தான் கேரளா அரசு அதைக் கட்டுப்படுத்தியிருக்கிறது.

எனவே கொரோனா பாதிப்பு, அதைக்கட்டுப்படுத்துவது என்பது முற்றிலும் மருத்துவம் சார்ந்த பிரச்சனை மட்டுமல்ல; அந்த நடவடிக்கைகளை வெற்றிகரமாக செயல்படுத்துவதில் மத்திய அரசே அனைத்து அதிகாரங்களையும் நிதியையும் தன்வசம் குவித்துக்கொள்ளாமல், இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் அடிநாதமாக உள்ள கூட்டாட்சி தத்துவம் என்ற கோட்பாட்டை உறுதியாகப் பின்பற்றி மாநிலங்களுக்கு முழுமையான அதிகாரம், கூடுதல் நிதி; உள்ளாட்சி அமைப்புகளுக்கு கூடுதல் அதிகாரம், சரிபாதி நிதி ஒதுக்கீடு என முழுமையான அதிகாரப்பரவல் மட்டுமே கொரோனா உள்ளிட்ட எத்தகைய நெருக்கடியையும் திறம்பட எதிர்கொள்வதற்கான வழியாகும். மத்திய அரசுக்கு அதை உணர்த்த வேண்டியதும், செயல்படுத்த வைக்க வேண்டியதும் நமது கடமையாகும்.

# கொரோனா தொற்றும் மைய அரசின் பொருளாதார அணுகுமுறையும்

*பேரா. வெங்கடேஷ் ஆத்ரேயா*

### அறிமுகம்

கொரோனா தொற்று கடந்த மூன்று மாதங்களுக்கும் மேலாக இந்தியாவில் வேகமாக பரவி வருகிறது. தொற்றின் பாதிப்பு மட்டுமின்றி, திட்டமற்ற, முன்பின் முரணான, மைய அரசின் அணுகுமுறை மிகவும் அதிகமான அளவில் மக்களை குழப்பியுள்ளது; அச்சத்தில் ஆழ்த்தியுள்ளது. பெரும்பகுதி உழைப்பாளி மக்கள் கடும் சிரமங்களுக்கு உள்ளாகியுள்ளனர். குறிப்பாக, 4 மணி நேர அவகாசம்கூட தராமல் ஊரடங்கு உத்தரவை

பிறப்பித்து அமலாக்கியது கோடிக்கணக்கான புலம்பெயர் தொழிலாளிகளை பெரும் துயரத்திற்கு ஆளாக்கியது. விவசாயிகள், விவசாயத் தொழிலாளிகள், சிறு-குறு தொழில் முனைவோர், தினக்கூலி அடிப்படையில் சகல துறைகளிலும் பணியாற்றும் தொழிலாளிகள், முறைசார் அரசு மற்றும் தனியார் துறைகளில் பணியாற்றும் சாதாரண உழைப்பாளி மக்கள் என்று மொத்த உழைப்புப் படையில் 80%க்கும் அதிகமானவர்கள் பணியிழந்து, ஊதியம் இழந்து, கடினமான சூழலை சந்தித்து வருகின்றனர். ஒரே காலத்தில், தொற்றுசார்ந்த சுகாதார சவாலையும், வாழ்வாதாரம் சார்ந்த பொருளாதார சவாலையும் பெரும்பகுதி மக்கள் இன்று எதிர்கொண்டு போராட வேண்டியுள்ளது. இதோடு மைய அரசின் தவறான கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் எதிர்த்தும் போராட வேண்டியுள்ளது.

**மைய அரசின் பொருளாதார அணுகுமுறை**

கொரோனா தொற்று காலத்தில் மிகப் பெரிய பாதிப்பை முதலில் எதிர் கொண்டவர்கள் புலம்பெயர் தொழிலாளிகள். உணவிற்கும் உறைவிடத்திற்கும் எந்த ஏற்பாடுமின்றி கோடிக்கணக்கான புலம்பெயர் தொழிலாளிகள் தங்கள் சொந்த ஊர்களுக்கு எப்படியாவது சென்றாக வேண்டும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டு, இதற்கான பொது போக்குவரத்து வசதிகளும் இல்லாத நிலையில் நடந்தே செல்வது என முடிவெடுத்து தங்கள் உயிர்களையே பணயம் வைக்கும் நிலை ஏற்பட்டது.

ஆலைகளும் அலுவலகங்களும் மூடப்பட்டதால் பெரும்பகுதி உழைப்பாளி மக்கள் வாழ்வு நிலைகுலைந்தது. அண்மையில் சிஎம் ஐ இ (CMIE) ஆய்வு நிறுவனம் ஏப்ரல் மாதம் வெளியிட்டுள்ள தகவல்படி நாட்டு அடங்கு நடவடிக்கைகளின் விளைவாக சுமார் 12 கோடி மக்கள் வேலை இழந்துள்ளனர். விவசாயிகள் பயிர்களை அறுவடை செய்த இடங்களில் நாட்டு அடங்கின் காரணமாக அவற்றை விற்க இயலாமல் தவிக்கின்றனர். சாகுபடி வேலைகளை செய்வதும் கடினமாகியுள்ளது. அழியும் பயிர்களை அடிமாட்டு விலைக்கு விற்கும் நிலைக்கு விவசாயிகள் தள்ளப்பட்டுள்ளனர். பணமதிப்பிழப்பு நடவடிக்கையும், முற்றிலும் கோளாறான ஜிஎஸ்டி கொள்கை அமலாக்கமும் சிறுகுறு தொழில் முனைவோரையும் வணிகர்களையும், பொதுவாக ஒட்டுமொத்தமாக முறைசாரா துறைகளையும் பலவீனப்படுத்தியிருந்த நிலையில் நாட்டு அடங்கு இப்பகுதியினரை மேலும் படுகுழியில் தள்ளியுள்ளது.

இத்தகைய சூழலில் இதுவரை மைய அரசு முன்வைத்துள்ள பொருளாதார நிவாரணம் என்பது தேச உற்பத்தி மதிப்பில் 0.5% என்ற அளவில்தான் உள்ளது. நிதி அமைச்சர் அறிவித்த 1.7 லட்சம் கோடி ரூபாய் நிவாரண தொகுப்பில் பல ஒதுக்கீடுகள் ஏற்கெனவே மத்திய பட்ஜட்டில் இடம்பெற்றவையே. நிகரமாக பார்த்தால், நிவாரணத் தொகுப்பின் மொத்த மதிப்பு 1 லட்சம் கோடி ரூபாய் கூட இருக்காது. மருத்துவமனைகளை மேம்படுத்தவும் ஆரோக்கியம் சார்ந்த இதர செலவுகளுக்கும் என்று நாடு முழுவதற்குமாக பிரதமர் அறிவித்த ரூ. 15,000 கோடி என்பது மிகவும் குறைவானது; பொருத்தமற்றது என்பதுடன் அதுவும் இரண்டு ஆண்டுகளுக்கான செலவுக்கு என்று கூறப்பட்டுள்ளது.

ஏற்கெனவே ஒரு விமர்சகர் கூறியதுபோல், மைய அரசு ஒருபுறம் மக்களை அடிக்கடி கைகழுவச் சொல்லிவிட்டு, மறுபுறம் மக்களை கைகழுவி விட்டுள்ளது என்று சொன்னால் மிகையாகாது. மார்ச் 14 மற்றும் மே 5 ஆகிய இரு தினங்களில் பெட்ரோல், டீசல் மீதான புதிய சிறப்பு கூடுதல் கலால் வரிகள் மற்றும் ரோடு செஸ் விதித்து சுமார் ரூ. 2 லட்சம் கோடி மக்களிடம் இருந்து மைய அரசு அபகரித்துள்ளது. அரசு அறிவித்த நிகர நிவாரணத்தைபோல் இரு மடங்கு இது என்பது குறிப்பிடத்தக்கது.

## மந்த நிலையில் பொருளாதாரம்

கடந்த இரண்டு ஆண்டுகளாகவே இந்திய பொருளாதார வளர்ச்சி வேகம் சரிந்து வருகிறது என்பதை அனைவரும் அறிவோம். தேச உற்பத்தி மதிப்பின் வளர்ச்சி விகிதம் மைய அரசின் 2020-21 நிதிநிலை அறிக்கை சமர்ப்பிக்கப்படும்பொழுதே அரசின் மிகையான கணக்குப்படியே கூட ஆண்டுக்கு 4.5% என்ற நிலையில்தான் இருந்தது. உண்மை அளவில் இதை 2.5% என்று கொள்ளலாம். ஆனால் பிரச்சினை வளர்ச்சி விகிதக் கணக்கு பற்றி மட்டுமல்ல. மூன்று முக்கிய பிரச்சினைகளை அன்றும் இன்றும் நாடு எதிர்கொள்கிறது.

ஒன்று, பல ஆண்டுகளாக தொடரும் கடுமையான வேளாண் நெருக்கடி. மூன்று லட்சம் விவசாயிகள் தற்கொலைக்கு தள்ளப்பட்டது மட்டுமின்றி அரசின் ஆதரவு மறுக்கப்பட்டு அதன் தாராளமய கொள்கைகளால் ஏழை, நடுத்தர விவசாயிகளும், இதர உடல் உழைப்பு தொழிலாளிகளும் நிலமும் வருமானமும் இழந்து வருவது தீவிரமாகியுள்ளது. பன்னாட்டு, இந்நாட்டு பெரும் வணிக நிறுவனங்களின் செல்வாக்கு வேளாண்துறையில்

பெருகியுள்ளது. பயிர் சாகுபடி பெரும்பகுதி விவசாயிகளுக்கு கட்டுபடியாகாத தொழிலாகியுள்ளது.

இரண்டாவது, பாய்ச்சல் வேகத்தில் அதிகரித்துள்ள வேலையின்மை விகிதம். 2011-12 இல் இருந்து 2017-18 வரையிலான காலத்தில் வேலையின்மை விகிதம் மூன்று மடங்கு ஆனது. இளம் வயதினர் (வயது 15 – 29 ஆண்டுகள்) மற்றும் படித்தவர்கள் (12 வகுப்புகளும் அதற்கு மேலும்) மத்தியில் இது 20%ஐ நெருங்கியது. இந்த விவரங்களை கொண்ட தேசீய புள்ளியியல் ஆணையத்தின் அறிக்கையை 2019 தேர்தலுக்கு முன்பாக வெளிவராமல் பார்த்துக் கொண்டது மோடி அரசு. இன்று நிலைமை மேலும் மோசமாகியுள்ளது.

மூன்றாவது, 2011-12 மற்றும் 2017-18 ஆண்டுகளை ஒப்பிடும்பொழுது, கிராமப்புறங்களில் குடும்பங்களின் மாதாந்திர சராசரி தலா நுகர்வுசெலவு 8.8% குறைந்துள்ளது. நகரப் பகுதிகளில் 2.2% என்ற அளவிற்கு சிறு அதிகரிப்பு இருந்தாலும், அங்கும் குறைந்தபட்சம் சரிபாதி குடும்பங்களுக்கு சரிவே ஏற்பட்டுள்ளது. குறிப்பிடப்பட்டுள்ள ஆறுஆண்டு காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் நாட்டின் மொத்த உற்பத்தி மதிப்பு 6%, 7%, 8% அதிகரித்ததாக எல்லாம் அரசு கணக்கு கூறினாலும், நிகழ்ந்த வளர்ச்சி பெரும்பகுதி மக்களை சென்றடையவில்லை என்பது தெளிவாகிறது.

மேலே கூறப்பட்டுள்ள மூன்று அம்சங்களையும் இணைத்துப் பார்த்தால் இந்தியாவின் கிராமங்களிலும் நகரங்களிலும் ஒரு ஆழமான கிராக்கி நெருக்கடி நிலவுகிறது என்பது தெளிவாகத் தெரியும். மைய அரசு இந்த நெருக்கடி இருப்பதாகவே இன்றுவரை அதிகாரபூர்வமாக ஏற்றுக் கொள்ளவில்லை. மந்த நிலை பற்றி பெருமுதலாளிகள் பகிரங்கமாக கடந்த ஆண்டு ஆகஸ்ட் -செப்டம்பர் மாதங்களில் பேசினர். அதன்பின் பெருமுதலாளிகளுக்கு ஆதரவாக பல நடவடிக்கைகளை மைய அரசு மேற்கொண்டது. இவற்றின் மூலம் முதலாளிகளுக்கும் பங்குச்சந்தையில் ஊகவணிகம் செய்து லாபம் ஈட்டும் அன்னிய நிதிமூலதனங்களுக்கும் ஏற்றுமதி ஊக்குவிப்பு என்ற பெயரிலும் வேறுவகைகளிலும் பிப்ரவரி மாத பட்ஜட்டுக்கு முன்பாகவே ரூ. 2.25 லட்சம் கோடி ரூபாய் வரிச்சலுகைகளை மைய அரசு வாரி வழங்கியது.

மேலும் 2020-2021 பட்ஜட்டில் சுமார் ரூ. 65,000 கோடி அளவிற்கு செல்வந்தர்களுக்கு வருமான வரிச்சலுகைகள் வழங்கப்பட்டது. இவ்வாறு கிட்டத்தட்ட ரூ. 3 லட்சம் கோடியை செல்வந்தர்களுக்கு தூக்கிக்

கொடுத்துவிட்டதால் அரசுக்கு ஏற்பட்ட வருமான இழப்பை ஈடுகட்டவும் அரசின் பற்றாக்குறையை குறைக்கவும் ரூ. 2.10 லட்சம் கோடி அளவிற்கு பொதுத்துறை நிறுவனப் பங்குகளை தனியாருக்கு விற்கப் போவதாக அரசு பட்ஜட்டில் அறிவித்தது. மக்கள் நலன் சார்ந்த திட்டங்களுக்கான ஒதுக்கீடுகளை வெட்டிச் சாய்த்தது.

இதற்கு இரண்டு உதாரணங்கள் போதும்: ரேகா திட்ட ஒதுக்கீடு சென்ற ஆண்டு (2019-20) ரூ.71,000 கோடி, நடப்பு ஆண்டில் ஒதுக்கீடு ரூ 61,500 கோடி தான். உணவு மானியம் ரூ. 75,000 கோடி ரூபாய் குறைக்கப்பட்டுள்ளது. மறுபுறம், வரிச்சலுகைகள் பெற்ற பெரும் கம்பனிகள் முதலீடுகளை முன்னெடுக்கவில்லை. கிராக்கி சரிந்துள்ள நிலையில் முதலீடுகள் நிகழவில்லை. மந்த நிலையும் தீவிரமடைந்தது. அரசின் வருமானமும் சரிந்தது. உலக நாடுகளில் பலவும் - குறிப்பாக முன்னணி முதலாளித்துவ நாடுகளும் – கொரோனாவின் கடும்தாக்குதலுக்கு உள்ளாகி, ஏற்கெனவே மந்தத்தை நோக்கி பயணித்துக் கொண்டிருந்த பன்னாட்டு பொருளாதாரமும் வரும் ஆண்டில் பெரும் சரிவை எதிர்கொள்ளும் நிலை உள்ளது.

இத்தகைய  சூழலில்தான் கொரொனா தொற்றை நாடு எதிர்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. பிற பல நாடுகளின் அரசுகள் கொரோனா பெரும் தொற்றை எதிர்கொள்ள நாட்டடங்கு அமல்படுத்துவதால் ஏற்படும் வாழ்வாதார பிரச்சினைகளை சமாளிக்க நிவாரணமாகவும் பொருளாதார மீட்சிக்காகவும் அவரவர் தேச உற்பத்தி மதிப்பில் 10% க்கு குறையாமல் பொருளாதார ஊக்க நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன. ஆனால் இந்திய அரசு கடுமையான சிக்கன நடவடிக்கைகளை பின்பற்றுகிறது. முன்பு நாம் குறிப்பிட்ட தேசஉற்பத்தி மதிப்பில் வெறும் 0.5% என்ற அளவிலான நிவாரணம் தவிர எந்த நிவாரணமும் அறிவிக்கப்படவில்லை. மாறாக, கலால் வரிகளை உயர்த்தி கூடுதல் வரிச்சுமையை மக்கள்மீது திணித்துள்ளது. இவற்றிற்கு மத்தியில், நாட்டு அடங்கை முடிவுக்கு கொண்டுவந்து ஆலைகளையும் அலுவலகங்களையும் திறக்க முதலாளிகள் தரப்பிலிருந்து தொடர் அழுத்தம் தரப்பட்டு வருகிறது. பல வாரங்கள் உற்பத்தி தடைப்பட்டதால் ஆலைகளையும் அலுவலகங்களையும் திறப்பது மட்டுமின்றி, திறந்த பின் தொழிலாளர்கள் இழந்த வேலைநாட்களை ஈடுசெய்யும் வகையில் 12 மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்றும், சில ஆண்டுகளுக்கு தொழிலாளர் உரிமை சட்டங்களை அமல்படுத்த வேண்டாம் என்ற தொனியிலும், முதலாளி வர்க்கம் தனது ஊடக ஊதுகுழல்கள் மூலம் உரக்கப் பேசுகிறது. பாஜக ஆளும்

மாநிலங்களான மத்தியப்பிரதேசம், உத்திரப் பிரதேசம், கர்னாடகா மற்றும் குஜராத் ஆகியவற்றில் இதற்கான சட்டத் திருத்தங்கள் விரைவில் அமலாக உள்ளன. கொரோனா பெரும் தொற்று காலத்தையும் தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொள்ள ஆளும் வர்க்கம் களம் இறங்கியுள்ளது. படிப்படியாக நாட்டுஅடங்கு தளர்த்தப்பட்டு வரும் சூழலில் நாம் இதனை கணக்கில் கொள்ள வேண்டும்.

## என்ன செய்ய வேண்டும்?

உடனடியாகவும் தொடர்ந்தும் பொருத்தமான சில கோரிக்கைகளின் அடிப்படையில் நாம் மக்களை திரட்ட வேண்டியுள்ளது. கருத்துரீதியாகவும் களப்பணியாகவும் நாம் இதனை  செய்ய வேண்டும். கீழ்காணும் ஆலோசனைகள்/ கோரிக்கைகள் பரிசீலிக்கத்தக்கவை:

*உடனடிக் கோரிக்கைகள்*

- அனைத்து புலம்பெயர் தொழிலாளிகளுக்கும் அவர்கள் விரும்பும் பட்சத்தில் அவரவர் சொந்த ஊருக்கு மைய அரசு செலவில் பாதுகாப்பாக பயணிக்க உத்தரவாதம் செய்யப்பட வேண்டும்.
- கிட்டத்தட்ட எண்பது சதவீத குடும்பங்களுக்கு உடனடியாக மைய அரசு ஒரு மாதத்திற்கு ஒரு குடும்பத்திற்கு ரூ 7500 என்ற அடிப்படையில் மூன்று மாதம்  நிவாரணத்தொகை வழங்கவேண்டும்.
- இக்குடும்பங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு நபருக்கு மாதம் 10 கிலோ தானியம் ஆறு மாத காலத்திற்கு விலையின்றி வழங்க வேண்டும். அரசு கணக்குப்படி கிட்டத்தட்ட 7.5 கோடி டன் தானியம் இந்திய உணவு கார்ப்பரேஷனின் கிடங்குகளில் உள்ளது. குளிர்கால பயிர் அறுவடை முடிந்துவரும் நிலையில், மேலும் 4 கோடி டன் தானியங்கள் கொள்முதல் செய்யப்பட்டு வந்து கொண்டிருக்கின்றன. எனவே விலையில்லா தானியம் கொடுப்பது சாத்தியமே. தானியம் மட்டுமின்றி பொருத்தமான அளவு பருப்பு, சமையலுக்கான எண்ணெய் போன்ற இதர அத்தியாவசிய மளிகை பொருட்களும் தரப்பட வேண்டும்.
- சமைத்து உண்ண இயலாதவர்களுக்கு மதிய உணவு திட்ட வசதிகளை பயன்படுத்தி சமைத்த உணவு அளிக்கப்படலாம்.

இக்கோரிக்கைகளை நிறைவேற்ற தேச உற்பத்தி மதிப்பில் 3% என்ற அளவில்தான் செலவு ஆகும். இதற்கான வளங்களை பின்னர் பெரும்

செல்வந்தர்கள் மீது வரிகள் விதிப்பதன் மூலம் திரட்ட இயலும். எனினும் உடனடி சூழலில் ரிசர்வ் வங்கி மைய அரசுக்கு இத்தொகையை கடனாக வழங்க வேண்டும். இன்றைய நாட்டு அடங்கு சூழலிலும் மந்த கிராக்கி நிலையிலும் இதனால் பணவீக்கம் ஏற்படும் வாய்ப்பு மிகக் குறைவு. மேலும் ரிசர்வ் வங்கியிடம் ஏறத்தாழ 50,000 கோடி அமெரிக்க டாலர்கள் கையிருப்பு உள்ளதால் தேவை ஏற்பட்டால் அவசியமான இறக்குமதி மூலம் விலைஉயர்வை கட்டுப்படுத்த இயலும். ரொக்கத் தொகையும் தானியம் மற்றும் மளிகை பொருட்களும் மைய அரசால் மாநிலங்களுக்கு இலவசமாக வழங்கப்பட வேண்டும். மாநிலங்கள் பணம் மற்றும் பொருள் விநியோகத்தை உள்ளாட்சி ஜனநாயக அமைப்புகள் மூலம் இதை அமலாக்க வேண்டும்.

மாநில அரசுகளுக்கு தரவேண்டிய பாக்கிகளை – ஜிஎஸ்டி நட்டஈடு, ஜிஎஸ்டி பங்கு, நிதிஆணைய பரிந்துரைபடி மாநிலங்களுக்கு தரப்பட வேண்டியவை, இன்ன பிற – உடனடியாக மைய அரசு கொடுக்க வேண்டும். மிக முக்கியமாக, இக்காலத்தில், மைய அரசின் உதவி அதிகரித்தாலும், மாநில அரசுகள் அதிகமான செலவுகளை செய்ய வேண்டி இருப்பதால், அவர்கள் மீது விதிக்கப்பட்டுள்ள கடன் வரம்பை இரட்டிப்பாக்க வேண்டும். மேலும் ரிசர்வ் வங்கி நேரடியாக மாநில அரசுகளுக்கு குறைந்த வட்டியில் கடன் அளிக்க வேண்டும். இதற்கான விதிமுறை மாற்றங்களை மைய அரசு உடனடியாக கொண்டுவர வேண்டும்.

கொரோனா பெரும்தொற்றை எதிர்கொள்ள பொதுத்துறையில் உள்ள மருத்துவ வசதிகள் மட்டும் போதாது என்ற நிலையில் உடனடியாக பல்வேறு அரசு மானியங்களை அனுபவித்துவரும் தனியார் மருத்துவமனைகள அரசு குறிப்பிட்ட காலத்திற்காவது கையகப்படுத்தி பயன்படுத்த வேண்டும். இம்மருத்துவமனைகளில் பணிபுரிவோரின் ஊதியங்களை அவற்றைப் பயன்படுத்தும் காலப்பகுதி வரையில் அரசு கொடுக்கலாம். விரிவான அளவில் தொற்று அறியும் சோதனைகளை செய்வதற்கும் இது அவசியம்.

இவ்வாறு மைய அரசு கூடுதல் செலவுகளை ஏற்கும்பொழுது அதன் பற்றாக்குறை கணிசமாக அதிகரிக்கும். இதனால் நிதிமூலதனம் நாட்டைவிட்டு பிற நாடுகளுக்கு செல்லும் வாய்ப்பு அதிகரிக்கும். இத்தகைய சூழலில், மூலதனம் நாட்டைவிட்டு வெளியேறுவது என்ற நடவடிக்கைமீது வலுவான கட்டுப்பாடுகளை கொண்டுவர வேண்டும். மேலும் ஐ எம் எஃப் அமைப்பில் அனைத்து நாடுகளுக்கும் கூடுதல் சிறப்புபணம் பெறும் உரிமைகளை (Special Drawing Rights or SDRs) அளித்திட

பரிந்துரைக்கப்பட்டுள்ள ஆலோசனைகளை இந்திய அரசு வலுவாக ஆதரிக்க வேண்டும்.

**அடுத்தகட்ட நடவடிக்கைகள்**

மேற்கூறிய நடவடிக்கைகள் நிவாரணம் அளிக்கும் தன்மையில்தான் உள்ளன. அடுத்தகட்டமாக உற்பத்தி மீட்பையும் மக்களின் வாழ்வாதாரங்களை வலுப்படுத்தும் பணிகளையும் மேற்கொள்ள வேண்டும். குறிப்பாக, விவசாயிகள், சிறு-குறு தொழில் முனைவோர், நகர, கிராம கூலி தொழிலாளர்கள் ஆகிய பகுதியினரின் வாழ்வாதாரத்தை வலுப்படுத்த வேண்டும். இதில் முக்கிய அம்சங்கள் ஐந்து: மகாத்மா காந்தி ஊரக வேலைஉறுதி திட்டம் (ரேகா); சிறு-குறு தொழில் முனைவோர் மற்றும் விவசாயிகள் பாதுகாப்பு; புலம்பெயர் தொழிலாளிகள் மீண்டும் பணிகளில் இணைவது; அத்தியாவசிய பண்டங்களின் அளிப்பை உறுதி செய்தல்; ஊரக பொருளாதார மீட்சி.

ரேகாவில் எடுக்கப்பட வேண்டிய முக்கிய நடவடிக்கைகள் தொழிலாளிகளின் சம்பள பாக்கியை கொடுப்பது, ஊர் திரும்பி வரும் புலம்பெயர் தொழிலாளிகள் அனவருக்கும் வேலைஅட்டை கேட்காமல் பணி கொடுப்பது, ஒவ்வொரு ஊரக குடும்பத்திற்கும் 100 நாள் வேலை என்பதற்கு பதில் உழைக்க முன்வரும் அனைத்து வயதுவந்த குடும்ப உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் 100 நாள் வேலை அளிப்பது, வேலை கொடுக்க இயலாத பட்சத்தில் வேலையின்மை உதவிதொகை ஆகிய கோரிக்கைகள் முன்வைக்கப்பட வேண்டும். மேலும் நகரப் பகுதிகளுக்கும் ரேகா போன்ற திட்டம் கொண்டுவந்து இதன் மூலம் சிறு-குறு தொழில் முனைவோருக்கு உதவி செய்வது என்பதும் ஒரு முக்கிய கோரிக்கை.

சிறு-குறு தொழில்களுக்கு ஒரு ஆண்டு காலம் கடன் திருப்புதல் ஒத்திவைக்கப்பட வேண்டும். குறைந்த வட்டியில் அரசின் உத்தரவாத அடிப்படையில் தாராளமாக கடன் வழங்கப்பட வேண்டும். விவசாயிகளின் நீண்டநாள் கோரிக்கையான ஒரு முறை கடன் ரத்து என்பதை அமலாக்க வேண்டும். பால் உள்ளிட்ட வேளாண் விளைபொருட்களை விவசாயிகளுக்குக் கட்டுபடியாகும் விலையில் அரசு கொள்முதல் செய்ய வேண்டும்.

புலம்பெயர் தொழிலாளிகளில் மீண்டும் நகரங்களுக்கு சென்று பணிபுரிய முன்வருவோருக்கு உரிய ஊக்கம் அளிக்கப்பட வேண்டும்.

**நீண்டகால நடவடிக்கைகள்**

இந்திய நாட்டின் முதன்மையான சவால் வேளாண் பொருளாதாரத்தின் புரட்சிகர மாற்றம் ஆகும். இதற்கு அடிப்படை முழுமையான நிலச்சீர்திருத்தம். நிலஉச்சவரம்பு சட்டங்கள் கறாராக அமல் செய்யப்படுவதன் மூலம் கிடைக்கும் உபரி நிலங்களும் அரசு தரிசு நிலங்களும் நிலமற்ற விவசாய தொழிலாளர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் பகிர்ந்து அளிக்கப்படுவது அவசியம். மேலும் பல ஆண்டுகளாக விவசாயத் துறையிலும் ஊரக கட்டமைப்பு துறைகளிலும் அரசு முதலீடு குறைக்கப்பட்டு வருகிறது. விவசாயம் மற்றும் ஊரக கட்டமைப்பிற்கான அரசு முதலீடுகள் பன்மடங்கு உயர்த்தப்பட வேண்டும். பாசன விரிவாக்கம், வேளாண் ஆராய்ச்சி விரிவாக்கப் பணி அமைப்புகள் வலுப்படுத்துதல் உள்ளிட்டு பன்முக நடவடிக்கைகள் தேவை.

உள்நாட்டு சந்தையை மையப்படுத்தியதாக நமது வளர்ச்சி இருக்க வேண்டும். கட்டற்ற உலகமயம் ஏற்புடையதல்ல. வலுவான பொதுத்துறை, சுயச்சார்பு அடிப்படையிலான அறிவியல் - தொழில்நுட்ப வளர்ச்சி, அரசின் வரிக்கொள்கைகளில் நேர்முக வரிகளின் பங்கை அதிகப்படுத்தும் முயற்சிகள், மத்திய மாநில நிதிஉறவுகளில் ஜனநாயக தன்மையிலான மாற்றங்கள் ஆகியவையும் அவசியமான நீண்டகால நடவடிக்கைகள். சுகாதாரம், கல்வி, கட்டமைப்பு ஆகிய துறைகளில் கணிசமான பொதுமுதலீடுகளை அரசுகள் மேற்கொள்ள வேண்டும்.

# எல்லைமீறிய உழைப்புச் சுரண்டலுக்கு மூலதனத்தை அழைக்கும் பாஜக

**எஸ். கண்ணன்**

அரசும், முதலாளித்துவமும் பொது முடக்கத்தில் தொழிலாளர்களையும், ஜனநாயக அமைப்புகளையும் முடக்கி, தீவிரமாக செயல்படுகிறது. மார்க்ஸ் சொன்னது போல் மூலதனம் தன்னை மேலும் மேலும் அதிகரித்து கொள்வதற்கு, இந்த கொரானா கொள்ளை நோய் காலத்தையும் விட்டு வைக்கவில்லை. பொது மருத்துவம் பறிக்கப்பட்ட மக்களுக்கு, கொரானா நோய் இருக்கிறதா இல்லையா என்பதை பரிசோதித்து கொள்வதும் கூட, மிக அதிக செலவு பிடிக்கிறது. தனியார் பரிசோதனை மையங்கள் ரூ. 4500 வசூலிக்க அரசே வழிகாட்டுகிறது. தங்களின் அடிப்படை தேவை என்ன என்பது குறித்து முடிவெடுக்க முடியாத பொதுபுத்தியை, அரசும் அதைக் கட்டுப்படுத்தும் சமூக அமைப்பும் வடிவமைத்து இருக்கிறது. இறக்குமதி செய்த கருவிகள் அப்பட்டமாக விலை அதிகம் கொடுக்கப்பட்ட செய்தி, பரபரப்பாக மாறினால், மதுக்கடைகளை திறந்து, அதுகுறித்த விவாதப் பொருளில் மக்களை திசைதிருப்புகிறது. அரசு கஜானாவை சூறையாடும் பணியை, ஆளும் கட்சி தலைவர்களும், முதலாளிகளும் போட்டி போட்டு செய்கின்றனர்.

கடந்த பல ஆண்டுகளாக பின்பற்றப்பட்டு வரும் பொருளாதார கொள்கையான ஏகாதிபத்திய உலகமயமாக்கல் இந்த நிலை உருவாக பெருமளவு பங்களித்துள்ளது. *எக்கனாமிக் அண்ட் பொலிட்டிக்கல் வீக்லி* இதழில், நோய்த்தொற்றும் முதலாளித்துவமும் என்ற கட்டுரையை சந்தீபன் பக்சி என்பவர் எழுதியுள்ளார். இதில் மூன்று முக்கிய அம்சங்கள் முன்வைக்கப்படுகின்றன. ஒன்று, பொது சுகாதாரப் பராமரிப்பு குறித்த பணிகள், அரசிடம் இருந்து படிப்படியாக தனியார் முதலாளிகளுக்கு கைமாற்றப்பட்டது. இரண்டு, இதுவரை இல்லாத வகையில், போக்குவரத்து ஏற்பாடுகள் மூலம் வேலை வாய்ப்புக்காகவும், சந்தைக்காகவும் உலகம் முழுவதிலும் ஒட்டி உறவாடும் புதிய சூழலை உலகமய பொருளாதாரக் கொள்கை அதிகரித்தது. மூன்று, இயற்கை மற்றும் சுற்றுச் சூழலை அழித்து ஒழித்தது. முதலாளித்துவம் காடுகளை அழித்ததும், கால்நடை வளர்ப்பு

உள்ளிட்ட மொத்த விவசாயமும் தொழிற்சாலை போல் மாற்றப்பட்டது ஆகும் என அவர் கூறுகிறார்.

1918இல் இன்ஃபுளுவன்ஸா உள்ளிட்ட பல்வேறு நோய்த் தொற்றுகளுடன் போராடியபோதும் உலகம் அதிலிருந்து பாடம் கற்கவில்லை. காரணம் முதலாளித்துவத்தின் அதீத லாபவெறி, அனைத்தையும், தனியாருக்கு தாரை வார்க்கும் போக்கு, எல்லாவித எதிர்ப்புகளையும் புறக்கணித்தது. அறிவியலும் தொழில் நுட்பமும், மருத்துவத் துறையில் கோலோச்சினாலும், நிதிமூலதனத்தின் தாக்கம், இன்சூரன்ஸ் நிறுவனங்களை வளர்த்தது. தனியாரிடம் மருத்துவம் ஒப்படைக்கப்பட்டாலும், காப்பீடு மூலம் சிகிச்சை கிடைக்கிறதே என்ற திருப்தியுணர்வை, ஒவ்வொருவரிடமும் மேலோங்கச் செய்திருக்கிறது. முதலாளித்துவ சமூகத்தின் பொதுபுத்தி கட்டமைத்தலின் ஒரு பகுதியாகவே இதை பார்க்க வேண்டியுள்ளது.

**கொள்ளை நோய் காலத்திலும் கார்ப்பரேட் பாசம்:**

தாராளமய பொருளாதாரக் கொள்கை துவங்கிய காலத்தில் இருந்தே, தேர்ந்தெடுக்கப்படும் அரசுகள் கார்ப்பரேட் ஆதரவு செயல்களைத் தீவிரப்படுத்தி வருகிறது. தற்போதைய கொரானா பாதிப்புக்கு எதிராக கார்ப்பரேட் மட்டுமல்ல, அனைத்து பகுதி மக்களும் முடங்கி இருக்கும் நிலை உருவாகியுள்ளது. ஆனால் கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு ஏற்படும் இழப்புகளை பெரிதாகவும், சாதாரண மக்களின் இழப்பை ஒரு பொருட்டாக மதிக்காத வகையிலும் சித்தரிக்கப்படுகிறது. கார்ப்பரேட் நிறுவனங்கள் தங்கள் இழப்பை நிவர்த்தி செய்ய ஊதிய வெட்டு உள்ளிட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள வழிகாட்டப்படுகிறது. உற்பத்தி இல்லை; வருவாய் இல்லை; எப்படி நிறுவனங்கள் ஊதியம் அளிக்க முடியும்? என்ற கேள்விகள் மூலம் ஊதிய வெட்டை அமலாக்கிடும் பாதுகாப்பு கவசம் முதலாளிகளுக்கு வழங்கப்படுகிறது.

உலக அளவிலும் இது போன்ற செயல்பாடுகள் அதிகரித்து வருகின்றன. அமெரிக்காவில் H-1B விசா பெறப்பட்டவர்கள் மீது நடத்தப்பட்ட கொள்ளை குறித்து ட்ரூத் அவுட் இணைய இதழ் பலவகைகளில் அம்பலப்படுத்தி உள்ளது. H-1B விசா அமெரிக்காவில் பணிக்காக சென்றவர்களுக்கு கிடைக்கும் ஒரு அங்கீகாரமாக கருதப்படுகிறது. அமெரிக்காவில் உள்ள கார்ப்பரேட் நிறுவனங்களில் 30 முன்னணி நிறுவனங்கள் H-1B விசா வழங்கப்பட்ட ஊழியர்களை மிக அதிகமாக பயன்படுத்தி வருகின்றன. மைக்ரோசாஃப்ட், ஆப்பிள், ஃபேஸ்புக், அமேசான், வால்மார்ட், கூகுள்

போன்றவை இதில் முக்கியமானவை. இந்த நிறுவனங்கள் தொழில்நுட்பம் மற்றும் கோட்பாடு ரீதியில் அறிவு படைத்தவர்களுக்கான ஊதியத்தை, அமெரிக்க சட்டத்தின்படி தீர்மானிக்கப்பட்டவாறு, இவர்களுக்கு வழங்கவில்லை; குறைவாக வழங்கப்படுகிறது எனக் கூறப்படுகிறது. லெவல் 2க்குரியவருக்கு லெவல் 1 அளவில் ஊதியம் வழங்கப்படுகிறது. இது தொழிலாளர் துறையின் அனுமதி இல்லாமல் மேற்கொள்ளப்பட்டதாக சொல்லப்படுகிறது.

இந்தியாவின் பல நிறுவனங்களில் ஊதியக் குறைப்பு அமல்படுத்தப்படுகிறது. பிரதமர் மோடி, ஏப்ரல் 14 அன்று இரண்டாவது முறையாக பொது முடக்கம் குறித்து உரை நிகழ்த்தும்போது, நிறுவனங்கள் ஊதியத்தை வெட்டக்கூடாது; ஆட்குறைப்பு செய்யக்கூடாது போன்றவற்றை தெளிவாக கூறினார். ஆனால் இங்குள்ள தனியார் நிறுவனங்கள் இதை மீறும் வகையில்தான் நடந்து கொள்கின்றன. பெரும்பான்மையான ஊழியர்கள் மற்றும் தொழிலாளர்களிடம் 10 முதல் 30 சதவீத ஊதிய வெட்டு அமலாகியுள்ளது. வர இருக்கும் மே, ஜூன் மாதங்களிலும் ஊதியம் வெட்டப்படும் என்று குறிப்பிடுகின்றனர். பல தகவல் தொழில் நுட்ப ஊழியர்களுக்கு, ஊதிய வெட்டு பகிரங்கமாக அறிவிப்பு செய்யப்படுகிறது. இதன் மீது எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இவை சிறு, குறு தொழில் நிறுவனங்கள் அல்ல. பெரும் கார்ப்பரேட் நிறுவனங்கள் ஆகும். லாபவிகிதக் குறைவு, பெரு நிறுவனங்களுக்கு மிகப் பெரிய அதிர்ச்சியை ஏற்க முடியாத மனநிலையை உருவாக்குகிறது. கடந்த ஆண்டு லாப விகிதத்தை விடவும் நடப்பு ஆண்டு லாப விகிதத்தை அதிகரிக்க, எந்த ஒரு மனிதத் தன்மையற்ற செயலையும் செய்யலாம் என பெரு நிறுவன நிர்வாகத்தினர் முடிவு செய்கின்றனர்.

கடந்த காலங்களில் அடைந்த லாபத்தை கேள்விக்கு உட்படுத்தி ஊதியம் வழங்கும் நிர்ப்பந்தத்தை அரசுகளால் செய்ய முடியவில்லை. முன்மாதிரியாக இருக்க வேண்டிய மத்திய, மாநில அரசுகள் அடுத்த ஒன்றரை ஆண்டுகளுக்கு அகவிலைப்படி உயர்வு இருக்காது என அறிவித்துள்ளன. எதிர்வரும் மாதங்களின் நிலை குறித்து அரசுகளும், முதலாளித்துவமும் திட்டமிட்டு ஒரு பதட்ட நிலையை உருவாக்குவதாக இதைப் புரிந்து கொள்ள முடியும். இந்த பதட்ட நிலையில் கிடைத்தவரை போதும்; அல்லது இந்த முடக்கம் தொழிலாளர்களை விடவும், முதலாளிகளுக்கே பாதிப்பை உருவாக்கியுள்ளது என்ற கருத்தை சாதாரண மக்கள் மனதில் ஆழமாகப் பதிய வைக்கும் செயலாகும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊதிய விகிதம் குறைந்து வருவது குறித்து வெளியிட்ட  கருத்துக்கள் இந்நிலையில் முக்கியத்துவம் பெறுகின்றன. 20 மற்றும் 21 வது அகில இந்திய மாநாட்டு அறிக்கைகளில், “நிரந்தர தொழிலாளர்களின் எண்ணிக்கையை குறைப்பது, ஆலைகளுக்குள் கூட்டுபேர உரிமையற்ற, ஒப்பந்தமுறை மற்றும் பயிற்சித் தொழிலாளர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவது ஆகியவற்றின் மூலம், தொழிலாளர்களுக்கான ஊதிய பங்கு, கடந்த 30 ஆண்டுகளில் 30 சதத்தில் இருந்து 10 சதமாக குறைந்துள்ளது” எனக் கூறியிருந்தது. இதையே சர்வதேச தொழிலாளர் அமைப்பு பல பத்தாண்டுகளாக ஊதிய விகிதம் தேக்க நிலையில் உள்ளது எனக் கூறியுள்ளது.

மார்க்சிஸ்ட் கட்சியின் 22 வது அகில இந்திய மாநாட்டு அறிக்கை, “1972 முதல் 2013 வரையான காலப்பகுதியில், அடிமட்டத்தில் உள்ள 10 சதம் மக்களின் உண்மை வருமானம் வீழ்ச்சியை சந்தித்தது. உச்சத்தில் உள்ள 10 சதவீதத்தினர் அனைத்து விதமான பலன்களையும் அனுபவித்தனர். இடையில் உள்ள தொழிலாளர்களின் வருமானம் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததை விட விகிதாச்சார அளவில் குறைவை சந்தித்துள்ளது. மொத்தத்தில் 90 சதவீத மக்களின் உண்மை வருமானம் கடந்த முப்பது ஆண்டுக் காலமாக தேக்க நிலையில் உள்ளது” எனக் குறிப்பிடுகின்றது. இந்த விவரங்கள் சுரண்டலின் தன்மையை வெளிப்படுத்துகின்றன.

30 ஆண்டுகளாக தேக்க நிலையில் இருக்கும் ஊதிய விகிதம், தற்போது கொரானா பாதிப்பு காலத்தில் குறைக்கப்படுவதன் மூலம், நிறுவனங்களின் லாபவிகிதம் தக்க வைக்கப்படுகிறது. சமையல் எரிவாயு மான்யம் வேண்டாம் என மக்கள் முடிவெடுக்கும் வகையில், அவர்களின் உணர்ச்சியைத் தூண்டி விட்டது போல், இப்போது, திரை உலக பிரபலங்கள் மற்றும் பல்வேறு பிரபலங்கள் தங்களின் ஊதியத்தில் ஒரு பகுதியை குறைத்து கொள்ள முன்வருவதாக அறிவிக்கின்றனர். இதை தொலைக்காட்சிகள் செய்தியாக்குவதும், அந்த செய்தியை வாசிக்கும் வாசிப்பாளர், இந்த ஊதிய வெட்டுக்கு ஆளாவதும் சாதாரண நிகழ்வுகளாகின்றன. லாப விகிதத்தின் தொடர் உயர்விற்காக, கட்டமைக்கப்படும் கருத்தாக்கம் இவை என்பதை தீவிர பிரச்சாரமாக எடுத்துச் செல்ல வேண்டியுள்ளது.

**மீண்டும் உருவாகுமா பொருளாதார நெருக்கடி?**

நாம் சிக்கன நடவடிக்கையை கையாளாவிடில், நாடு மீண்டும் ஒரு பொருளாதார நெருக்கடிக்குள் சிக்கிக் கொள்ளும் என சிலர்

வாதிடுகின்றனர். கொரானா கால உற்பத்தி முடக்கம் மீண்டு வர ஒரு வருடம் கூட ஆகலாம். எனவே. நிறுவனங்களின் நிதி சமாளிப்பு திறன், தொழிலாளர் மற்றும் தொழிற்சங்கங்களின் ஒத்துழைப்பு இருந்தால்தான் சாத்தியம் என்ற வகையிலும், தொழிற்சங்கம் இல்லாத இடங்களில் நிர்வாகம் இந்த அளவு நடந்து கொள்வதே மிகத் தாராளமானது என்பதையும் திணிக்கின்றனர். பொருளாதார நெருக்கடியை அனைவரும் சமமாகப் பகிர்ந்து கொள்வதே நியாயமற்றது. ஆனால், வறியவர் தலையில் அதிகம் திணிப்பது மிகக் கொடிய ஒன்றாகும்.

2008ஆம் ஆண்டு அமெரிக்காவில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி, உலகின் பல நாடுகளை பாதித்தது. இந்தியாவிலும் தகவல் தொழில் நுட்ப துறையில் வேலைஇழப்பை கூடுதலாக உருவாக்கியது. அதையொட்டி ஊதிய உயர்வு நிறுத்திவைப்பு போன்ற நடவடிக்கைகள் கையாளப்பட்டன. அதாவது நெருக்கடி காலத்திற்கான அரசு நிவாரணத்தைப் பெற்றுக் கொண்ட தனியார் நிறுவனங்கள், மறுபுறத்தில் தங்கள் தொழிலாளர்களிடம் இருந்தும் கணிசமாக பறித்துக் கொண்டது. அதேபோல் பொருளாதார பெருமந்தம் குறித்து, பேரா. மணிக்குமார் ஆய்வு செய்து எழுதிய, “1930களில் தமிழகப் பொருளாதாரம்”, என்ற நூல் மேலும் சில விவரங்களைத் தருகிறது.  அதில் தொழில் பற்றி விவாதிக்கிற போது, “துணி உற்பத்தியைப் பொறுத்த அளவில் இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகள் 25 சதவீதம் வீழ்ச்சி கண்டது. அதேநேரம் இந்தியா 41 சதவீத உயர்வை எட்டியது. இரும்பு உற்பத்தியில் அமெரிக்காவும், இங்கிலாந்தும் முறையே 20 சதவீதம் வீழ்ச்சி கண்டது. இந்தியா 75 சதவீத உயர்வை அடைந்தது. பருத்தி உற்பத்தி தொழிற்சாலைகள் உள்ளிட்ட பலவும் வளர்ச்சி பெற்றன”, எனக் கூறுகிறார்.

இதற்கு எதிர் திசையில் சிறு மற்றும் குடிசைத் தொழில்கள் அழிவை சந்தித்த விவரங்களையும் பேரா. மணிக்குமார் பட்டியலிடுகிறார். அதற்கு காரணமாக, பெருமந்தத்தில் இருந்து மீட்சி பெற அமெரிக்காவும், இங்கிலாந்தும் இதர சில நாடுகளும் இந்தியாவில் இறக்குமதி செய்து குவித்த நுகர் பொருள்கள் ஆகும். ஒட்டு மொத்தமாக தொழில்துறையில் பெருமந்தம் ஏற்பட்டு இருந்ததால், வேலை இழப்பும், கூலி குறைப்பும் அதிகரித்தது என்கிறார். ஆனால் இதற்கு எதிரான தொழில் தாவா வழக்குகள் பெரிய அளவில் அதிகரிக்கவில்லை என்பதையும் பதிவு செய்துள்ளார்.

மேற்குறிப்பிட்ட விவரங்கள் உற்பத்தி திறன் இன்றிலிருந்து, பின் தங்கியிருந்த காலமாகும். இன்று உற்பத்தி திறன் அதிகரித்துள்ளது. எனவே அந்த

சூழ்நிலைகளை முழுமையாக இன்றைய காலத்திற்கு பொருத்திப் பார்க்க முடியாது. ஆனால் படிப்பினைகள் உள்ளது. அதாவது ஒருபகுதி வேலையிழப்பு உருவாக்கப்பட்டு, ஏற்கனவே உள்ள வேலை வாய்ப்பில் நெருக்கடியை உருவாக்கும் மூலதனத்தின் செயல்பாடு ஆகும். குறிப்பாக கடந்த 10 ஆண்டுகளில் செயற்கை நுண்ணறிவு இயந்திரங்களின் வளர்ச்சி உருவாகியுள்ளது. சென்னை உள்ளிட்ட உலகின் பல நகரங்களில் கொரானா பாதுகாப்பு நடவடிக்கைகளில் ரோபோக்களின் பயன்பாடு அதிகரித்து வருகிறது. எனவே ஒருபகுதி வேலைஇழப்பும், மற்றொரு புறம், புதிய தொழில்நுட்பம் கற்றவர்களில் ஒரு பகுதியினருக்கு மட்டுமே வேலை வாய்ப்பு கிடைக்கும் நிலை உருவாகலாம்.

கொரானா வைரஸ் குறித்து, வெளிப்படையாக சீனா நடந்து கொள்ளவில்லை, எனவே அங்குள்ள தொழில் மூலதனத்தை பிறநாடுகளுக்கு இடமாறுதல் செய்ய அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகள் முடிவு செய்துள்ளதாக செய்திகள் சொல்கின்றன. இதை ஈர்க்க தமிழகம் உள்ளிட்ட மாநிலங்கள் சிறப்பு குழுக்களை நியமித்துள்ளன. பாஜக ஆளும் பல மாநில அரசுகள் இதையொட்டியே தொழிலாளர் சட்டங்களில் திருத்தம் செய்து வருவதாக கூறப்படுகிறது.

**சட்டத் திருத்தங்கள்:**

இதுவரையிலும் இந்திய நாடாளுமன்றம் நியமித்த நிலைக்குழுக்கள், பல ஆண்டுகளுக்கு பின்னரே தங்கள் அறிக்கையை தாக்கல் செய்துள்ளன. ஆனால் தொழிலாளர்களின் வேலை நேரத்தை தீர்மானிக்கின்ற, தொழிலக பாதுகாப்பு மற்றும் சுகாதாரம் குறித்த சட்டத் தொகுப்பை, நாடாளுமன்றம் நிலைக்குழுவிற்கு கடந்த அக்டோபரில் ஒப்படைத்தது. இக்குழு இந்த பொது முடக்க காலத்தில் அவசர அவசரமாக இணையம் மூலம், உறுப்பினர்களின் கருத்தறிந்து, அறிக்கை சமர்பித்துள்ளது. மார்க்சிஸ்ட் கட்சி, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, தி.மு.க ஆகிய கட்சிகளின் உறுப்பினர்களின் எதிர்ப்பை உதாசீனம் செய்து மேற்படி நிலைக்குழு அறிக்கையை அளித்துள்ளது. அதில் வேலைநேரத்தை 8 மணியில் இருந்து 12 மணி நேரமாக உயர்த்தவும் பரிந்துரைத்துள்ளது. இதை அடியொற்றி குஜராத், மத்தியப் பிரதேசம், இமாச்சலப் பிரதேசம், அரியானா, ராஜஸ்தான், பஞ்சாப், ஒடிசா ஆகிய மாநிலங்கள் வேலைநேரம் 12 என தீர்மானித்து சட்டம் அல்லது அவசர சட்டங்களை இயற்றி வருகின்றன. உ.பி. மாநில அரசு குறைந்தபட்ச கூலிச்சட்டம், மற்றும் குழந்தை உழைப்பாளர் தடுப்பு சட்டம் தவிர மற்ற

தொழிலாளர் சட்டங்கள் அனைத்தையும் மூன்று வருடங்களுக்கு நிறுத்தி வைப்பதாக அவசர சட்டம் இயற்றி உள்ளது.

சுமார் 55 நாள்கள் உற்பத்தி துறை முடங்கியதை சரிகட்ட ஒவ்வொரு நாளும் 4 மணிநேரம் கூடுதலாக உற்பத்தியில் ஈடுபடுவது அவசியமா? என்ற கேள்வி தாராளமய பொருளாதார கொள்கைவாதிகளுக்கு கேட்கப்போவதில்லை. வேலைநேர அதிகரிப்பு, வேலைப்பறிப்பை அதிகரிக்கும்; உடல் ஆரோக்கியத்தை கெடுக்கும்; சந்தையில் நுகர்வு குறையும். ஆனால் பாஜகவின் மத்திய ஆட்சியாளர்கள், இத்தகைய விளைவுகள் குறித்து வாதிட தயாரில்லை. சீனாவில் குவிந்திருக்கும் இதர நாடுகளின் மூலதனத்தை ஈர்ப்பது மட்டுமே முக்கியம் என்கிறது பாஜக. இந்திய தொழிலாளர்களின் உழைப்பை பன்னாட்டு மூலதனத்திற்காக அப்பட்டமாக கொள்ளையடிக்கும் உரிமத்தை வழங்கும் முகவராக பாஜக ஆட்சி மாறியுள்ளது.

காரல் மார்க்ஸ் குறிப்பிட்டதுபோல், உழைப்பு சக்தியின் விலையைக் குறைக்கும் நடவடிக்கையில் அரசுகள் ஈடுபடுகின்றன. இது ஏற்கனவே தேக்கத்தில் இருந்த ஊதிய விகிதத்தை மேலும் பின்னோக்கி நகர்த்த எடுக்கும் முயற்சியின் ஒரு பகுதியாகும். வேலைநேரம் உயரும்போது, கூலியின் அளவு உயராமல் கட்டுக்குள் வைக்கும் ஏற்பாடும் இதற்குள் உள்ளது. ஏற்கனவே இடம்பெயர் தொழிலாளர்கள் 12 மணிநேரம் வேலை செய்து குறைவான கூலி பெறுவதை, இப்போது அனைத்து தொழிலாளருக்கும் பொதுவாக்கும் பணியை செய்கின்றனர்.

கடந்த காலங்களை விட ஒரு குறிப்பிட்ட பொருளை உற்பத்திக்கான நேரம் தொழில் துறையில் குறைந்துள்ளது. அதன் விளைவே உற்பத்தி அதிகரிப்பு ஏற்படுகிறது எனவும், மற்றொரு புறம் தொழிலாளி மீது உழைப்பு சுரண்டல் அதிகரிக்கிறது எனவும் தாமஸ் பிக்கட்டி, *21ஆம் நூற்றாண்டில் மூலதனம்* எனும் நூலில் குறிப்பிடுகிறார். பணக்கார நாடுகளில் வேலை நேரம் குறையவும், ஓய்விற்கான நேரம் அதிகரிக்கவும் இதுவே காரணம் எனவும் பிக்கட்டி கூறுகிறார். இந்தியாவிலும் ஆலைகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கான நேரம் குறைகிறது. ஒவ்வொரு தொழில்நுட்ப வளர்ச்சியையும் பயன் படுத்தி “சைக்கிள் டைம்” அதாவது பொருள் உற்பத்திக்கான நேரம் குறைக்கப்படுகிறது. அதன் மூலம் தொழிலாளர்களின் உபரி உழைப்பு நேரம் அதிகரிக்கிறது. எனவே வேலைநேரம் 12 மணிநேரமாக அதிகரிப்பதற்கு இந்தியாவில் அனுமதிப்பதை தடுத்து நிறுத்த அனைத்து ஜனநாயக அமைப்புகளும் ஒருங்கிணைந்து போராட வேண்டும்.

இந்தியாவில் தற்போது வேலையின்மை மிக அதிகமாக உயர்ந்துள்ளது. அவர்களுக்கு வேலை வழங்க உற்பத்தி நேரத்தைக் குறைப்பதை முன்வைத்து திட்டமிட்ட முயற்சி வேண்டும். ஒருநாளைக்கு 8 மணிநேரம் என்பதற்கு பதிலாக, மார்க்சிஸ்ட் கட்சி திட்டத்தில் கூறியவாறு, வேலைநேரத்தை 6 மணிநேரமாக குறைக்க வேண்டும். அல்லது சி.ஐ.டி.யு அகில இந்திய மாநாட்டு தீர்மானம் கூறியதுபோல், ஒரு நாளைக்கு 7 மணிநேரம், வாரம் ஐந்து நாட்கள் பணி என்பதாக திருத்த வேண்டும். அதன் மூலம் மூலதனக் குவிப்பை கட்டுபடுத்துவதுடன், வேலை வாய்ப்பு அதிகரிப்பு உள்ளிட்ட முன்னேற்றம் ஏற்பட வாய்ப்புள்ளது.

ஒட்டு மொத்தமாக இன்றைய கொரானா பொது முடக்க காலத்தில், முதலாளித்துவமும், பாஜக ஆட்சியாளர்களும் தொழிலாளர்களை கொள்ளையடிக்க எடுக்கும் முயற்சியை தடுக்கும் போராட்டத்தை வலுப்படுத்த வேண்டியுள்ளது. மாற்று கோரிக்கைகளான, வேலைநேர குறைப்பு போன்றவற்றை முன் வைத்து, அனைத்து ஜனநாயக அமைப்புகளையும் இந்தக் கோரிக்கைகளுக்காக ஒருங்கிணைப்பதே இன்றைய தேவையாகும்.

# விவசாயத்துறையில் கொரோனாவின் தாக்கம்

பெ.சண்முகம்

“ஒட்டுவாரொட்டி” என்று கிராமப்புற மக்களால் அழைக்கப்படும் தொற்றுநோய் உலகையே முடக்கிப் போட்டிருக்கிறது. சமூகத்தின் சகலதரப்பினரும் இதனால் பாதிக்கப்பட்டுள்ளனர். ஊரடங்கு உலகம் முழுவதும் நீட்டிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. உலகம் முடங்கி இருந்தாலும் உழவர்கள் ஓய்வின்றி உழைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால் மக்களுக்கு தேவையான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்து கொடுக்கும் பெரும்பொறுப்பை விவசாயிகள் நிறைவேற்றி வருகிறார்கள். “உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோர்” என்று போற்றுதலுக்குரியவர்கள் உழவர் பெருமக்கள். தேசம் அவர்களை வாழ்த்த கடமைப்பட்டிருக்கிறது.

ஊரடங்கின் காரணமாக உழவர்களும் கிராமப்புற மக்களும் பல்வேறு இன்னல்களுக்கு உள்ளாக்கப்பட்டிருக்கின்றனர்.

விதைத்து, வளர்த்து அறுவடை செய்யும் நேரத்தில் வாங்க ஆளில்லாமல் உற்பத்தி செய்த அனைத்து மகசூல்களையும் மண்ணோடு மண்ணாக

புதைக்க வேண்டிய அவலநிலைக்கு ஆளான விவசாயிகளின் மனநிலை என்னவாக இருந்திருக்கும் என்பதை உங்களால் கற்பனை செய்யமுடியுமா? ஆனால், அதுதான் நடந்தது. தமிழ்நாட்டில் நெல், கரும்புக்கு அடுத்து வாழை பிரதான பயிராகும். குறிப்பாக திருச்சி, தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் வாழை அதிகமாக பயிரிடப்படுகிறது. இங்கிருந்து கேரளா, கர்நாடகா, மகாராஷ்டிரா ஆகிய மாநிலங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுவது வழக்கம். போக்குவரத்து முற்றிலும் முடங்கிப் போய் விட்டதால் வாழைத்தார்களை வாங்க வியாபாரிகள் வரவில்லை. உள்ளூர் விற்பனையும் இல்லை. இந்த நிலையில், மொத்த வாழைத்தார்களையும் வெட்டி அந்த நிலத்திலேயே ஆழக் குழி தோண்டி புதைத்துவிட்டனர். திராட்சை, தர்பூசணி, பலா ஆகிய பழங்களும் விற்பனை செய்ய முடியாமல் அழுகி வீணாகிவிட்டது. மலர் சாகுபடி செய்த விவசாயிகள் நிலத்திற்கே உரமாகவாவது ஆகட்டும் என்று செடிகளை உழவடை செய்து அழித்துவிட்டனர்.

காய்கறிகளும் சந்தைகள் மூடப்பட்டதால் விற்பனை செய்ய முடியாமலும், உரிய விலை கிடைக்காமலும் சாலை ஓரங்களில் கொட்டிய அவலம். நெல் அரசு கொள்முதல் நிலையங்களுக்கு கொண்டு செல்லப்பட்டும் சாக்கு இல்லை, சுமைப்பணியாளர் இல்லை, பணமில்லை என்று காரணம் கூறி வாரக்கணக்கில் நெல் மூட்டைகள் திறந்தவெளியில் கிடந்து கோடை மழையில் நனைந்து வீணாகிவிட்டது. இதற்கு ஆட்சியாளர்களின் அலட்சியமே காரணமாகும். தமிழக அரசு குளிர்பதன கிடங்கு வசதியை இலவசமாக பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அறிவித்தது. ஆனால், விவசாயிகளால் அதைப் பயன்படுத்த முடியவில்லை. காரணம், இரண்டு முறை வண்டி வாடகை, இரண்டு முறை ஏற்று, இறக்க கூலி, விலை உத்தரவாதமின்மை போன்ற காரணங்களால் விவசாயிகள் இதை பயன்படுத்தவில்லை.

கோடைகால சாகுபடி நடைபெற்ற காலத்தில் இந்த ஊரடங்கு அமல்படுத்தப்பட்டதால் உரம், விதை, பூச்சிமருந்து உள்ளிட்ட இடுபொருட்கள் கிடைக்காமல் விவசாய பணிகள் நடைபெறவில்லை. இப்போது விவசாய கடன் வசூல் மூன்று மாத காலத்திற்கு தள்ளி வைக்கப்பட்டிருந்தாலும் பருவமழை துவங்கிய பிறகு அடுத்த சாகுபடி பணிகள் துவங்குவதற்கு விவசாயிகள் கையில் பணப்புழக்கம் இல்லை. எனவே, விவசாய கடன்களை தள்ளுபடி செய்து, புதிய கடன்கள் வழங்கினால்தான் விவசாயத்தை மேற்கொள்ள முடியும். புதிதாக கடன் பெற வேண்டிய நிலையிலுள்ள விவசாயிகள் பழைய கடனை கட்ட முடியாது என்பதை ஆட்சியாளர்கள் உணர

வேண்டும். சமீபத்தில் வெளியான தகவல், இந்தியாவின் 50 முதலாளிகளுக்கு பெற்ற கடன் ரூ. 68,607 கோடி வாராக்கடன் என்ற பெயரில் தள்ளுபடி செய்துள்ள விபரத்தை ரிசர்வ் வங்கி வெளியிட்டது. இதோடு ஒப்பிடும் போது விவசாயிகளின் கடனை தள்ளுபடி செய்வது அரசுக்கு பெரும் சுமையல்ல என்பதை சுட்டிக்காட்டுகிறோம். மத்திய- மாநில அரசுகள் விவசாயிகளுக்கு நேரடியாக எந்தவிதமான புதிய பொருளாதார உதவிகளையும் செய்யவில்லை என்பது அரசு வேளாண் சமூகத்தை புறக்கணிக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டு. பிரதம மந்திரி விவசாய உதவித்திட்டத்தில் 2000 ரூபாய் முன்கூட்டியே தரப்பட்டது. அது ஒன்றும் கொரானா ஊரடங்கு பாதிப்புக்காக உருவாக்கப்பட்ட புதிய திட்டமல்ல. இதிலும் 25 சதவீத விவசாயிகளுக்கு அந்தப் பணம் இன்னமும் கிடைக்கவில்லை. தமிழக அரசை பொறுத்தவரை அரிசி பெறும் அட்டை வைத்துள்ள குடும்பங்களுக்கு மட்டும் 1000 ரூபாய் வழங்கியதோடு சரி. இந்த ஆயிரம் ரூபாயையும், அரிசியையும் வைத்துக்கொண்டு இரண்டு மாத காலம் ஒரு குடும்பம் எப்படி உயிர்வாழ முடியும்?

கிராமப்புறங்களில் வீட்டிலிருந்த பண்ட பாத்திரங்களை அடகு வைத்துத்தான் மக்கள் சமாளித்திருக்கிறார்கள். அதற்கும் வழியில்லாதவர்கள் மற்றவர்களின் உதவியை எதிர்பார்த்து காலம் தள்ளுகிறார்கள். அரசிடமிருந்து பொருளாதார ரீதியான உதவிகள் கிடைக்காமல் போனால் பட்டினிச்சாவுகள் ஏற்படுவதை தடுக்க முடியாது. குடும்பஅட்டை இல்லாத குடும்பங்களின் நிலைமை படுமோசம். இவ்வளவு காலமும் குடும்பஅட்டை கொடுக்காமல் இருந்தது ஆட்சியாளர்களின் அலட்சியம் தானே காரணம். ஆனால், அதற்கான தண்டனையை மக்கள் அனுபவிக்க வேண்டுமா? இந்த பேரிடர் காலத்தில் கூட குடும்ப அட்டை இல்லை என்பதற்காக குடும்பத்தை பட்டினி போடும் இந்த ஆட்சியாளர்கள் எவ்வளவு கொடூரமான மனம் படைத்தவர்களாக இருக்க வேண்டும். இந்தப் பிரச்சனையில் சென்னை உயர்நீதிமன்றம் உத்தரவிட்ட பிறகும் அரசு செவி சாய்க்கவில்லை என்பதிலிருந்தே இவர்களின் கருணையுள்ளத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியும். இதுமட்டுமல்லாமல் வீடற்றவர்கள், நாடோடி சமூகத்தினர், ஆதிவாசிகள், சாலையோரங்களில் வசித்தவர்கள் என உண்ண உணவின்றியும், ஒதுங்க இடமின்றியும், செய்வதறியாது திகைத்து போயினர். தன்னார்வலர்களின் உதவியால்தான் இவர்கள் உயிர் பிழைத்துள்ளனர்.

கிராமப்புற மக்களுக்கு உள்ள பெரிய வேலைவாய்ப்பு திட்டம் தேசிய கிராமப்புற ஊரக வேலை உறுதித் திட்டம் ஆகும். இத்திட்டத்தின் கீழ்

வேலைபெற வேண்டிய பெரும்பாலானோருக்கு இன்னமும் வேலை வழங்கப்படவில்லை. பல கிராமங்களில் வேலை துவக்கப்படவே இல்லை.

இத்திட்டத்தில் வேலை அட்டை வைத்துள்ள அனைவருக்கும் வேலை வழங்கினால் கிராமங்களில் பணப்புழக்கம் ஏற்படும். ஓரளவு நெருக்கடியை சமாளிக்க முடியும். வேலை வழங்குவதில் ஏதாவது நடைமுறை சிக்கல் இருக்குமானால் ஒரு மாத ஊதியத்தை முன்பணமாக வழங்கி விட்டு பின்னர் பணியை செய்யச் சொல்லலாம். இதுபோன்ற மக்களுக்கு சாதகமான எந்த நடவடிக்கையும் எடுப்பதற்கு அரசுகளுக்கு மனம் இல்லை.

இத்தகைய சூழ்நிலையில், நுண்நிதி நிறுவனங்கள் கந்துவட்டிக்கு கடன் கொடுத்தவர்கள் கடனை திரும்பக் கட்டச்சொல்லி நிர்ப்பந்திக்கிறார்கள். ஊரடங்கு முடிவுற்றால் கடன்காரர்களின் தொல்லையிலிருந்து எப்படி மீள்வது என்பது மக்களுக்கு மிகப்பெரிய சவால். எனவே, இத்தகைய கடன்கள் உட்பட சில மாதங்களுக்கு தள்ளி வைக்க அரசு உத்தரவிட வேண்டும். இல்லையென்றால் வாழும் வீட்டை இழந்தும், தற்கொலை உள்ளிட்ட கொடுமைகள் நடைபெறும் என்பதை எச்சரிக்கிறோம்.

அரசு செய்ய வேண்டியது

1. ஊரடங்கு காரணமாக உற்பத்தி செய்த வேளாண் விளை பொருட்களை விற்க முடியாமல் பாதிப்புக்கு ஆளான அனைத்து விவசாயிகளுக்கும் இழப்பீடு வழங்க வேண்டும்.
2. சென்னை உயர்நீதிமன்றத்தின் அறிவுறுத்தலை ஏற்று சிறு-குறு விவசாயிகளுக்கு தலா 10 ஆயிரம் ரூபாய் உதவித்தொகை அளிக்க வேண்டும்.
3. விவசாயிகள் மற்றும் விவசாய தொழிலாளர்கள் பெற்றுள்ள கடன்களை தள்ளுபடி செய்வதுடன் அடுத்த பருவ வேளாண் பணிகளை துவக்குவதற்கு புதிதாக கடன் வழங்க வேண்டும்.
4. நூறுநாள் வேலை திட்டத்தில் வேலை அட்டை வைத்துள்ள அனைவருக்கும் வேலை வழங்குவதுடன் அனைத்து கிராமங்களிலும் வேலை வழங்குவதை உறுதிப்படுத்துவதுடன், விவசாய பணிகளுக்கு இத்திட்ட பணியாளர்களை பயன்படுத்திட அரசு உத்தரவிட வேண்டும்.
5. இடுபொருட்கள் தட்டுப்பாடின்றி கிடைத்திட தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

6. குடும்ப அட்டை இல்லாத குடும்பங்களுக்கும் ரேசன் பொருட்களும், உதவித்தொகையும் கிடைத்திட அரசு உத்தரவிட வேண்டும்.

(கட்டுரையாளர் பொதுச்செயலாளர், தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்)

## கொரோனா தொற்று: கைகொடுக்கும் அரசு மருத்துமனைகள், கைவிரிக்கும் கார்ப்பரேட்டுகள்

டாக்டர். எஸ். காசி,

எப்போழுது டெங்கு, பறவைக் காய்ச்சல், பன்றிக் காய்ச்சல் போன்ற தொற்று நோய்கள் ஏற்பட்டாலும், பொது சுகாதாரக் கட்டமைப்பில் உள்ள ஓட்டைகளையும், குறைகளையும் அவை வெளிப்படுத்துவது இயல்பு. இந்தியாவில் காணப்படும் நோய்களில் 25% தொற்று நோய்களே ! காசநோய்க்கு மட்டும் ஒவ்வொரு ஆண்டும் சராசரியாக 2 லட்சம் பேர் பலியாகிறார்கள். உலக அளவில் பிரசவ காலத்தில் இறக்கும் பெண்களில், ஐந்தில் ஒருவர் இந்தியர். கடந்த பத்தாண்டுகளில் மட்டும் பன்றிக்காய்ச்சலுக்கும், டெங்கு காய்ச்சலுக்கும் ஆயிரக்கணக்கானோர் - பெரும்பாலும் ஏழை மக்கள் - இறந்துள்ளனர். இருந்த போதிலும் மத்திய, மாநில அரசுகள், பொது சுகாதாரக் கட்டமைப்பைக் கண்டுகொள்வதில்லை. மாறாக தனியார் மற்றும் கார்ப்பரேட்டுகள் வசம் மருத்துவ சேவைகளை கைமாற்றுவதிலேயே அவை கவனம் செலுத்துகின்றன.

"பொதுமுடக்கத்தின்" நோக்கங்கள் இரண்டு: 1) கரோனா வைரஸ் நோயின் பரவலைத் தடுப்பது அல்லது குறைப்பது. 2) இதனால் கிடைக்கும் கால அவகாசத்தை பயன்படுத்தி, பொது  சுகாதாரக் கட்டமைப்பை மேம்படுத்துவது. முதல் நோக்கத்தில் ஓரளவு வெற்றி பெற்றது போல் தோன்றினாலும், இரண்டாவது நோக்கத்தை முறையாக நிறைவேற்றாததால், நாம் பெற்ற ஆரம்பகால வெற்றியும் வீணடிக்கப்படுகிறது.

"பொதுமுடக்கம்" அல்லது ''ஊரடங்கு'' காலத்தில் ஏற்கனவே இயங்கிவரும் பொதுத்துறை மருத்துவமனைகளே கை கொடுத்து வருகின்றன. மத்திய மாநில அரசுகள் புதியதாக உள்கட்டமைப்பை விரிவுபடுத்தாமல், ஒரு சில மருத்துவமனைகளை, ''கோவிட்'' மருத்துவமனைகளாக மாற்றியதைத் தவிர, எந்த முன்னேற்றத்தையும்  ஏற்படுத்தவில்லை. ஒரு சில இடங்களில், விளையாட்டு மற்றும் வணிக வளாககங்கள் மற்றும் திருமண மண்டபங்கள் போன்றவற்றை, அரைகுறை வசதிகளுடன், 'தனிமைப் படுத்துத்தல்" (Quarantine) மையங்களாக மாற்றினார்களே தவிர புதியதாக முதலீடோ

அல்லது மருத்துவமனைகளோ உருவாக்கப்படவில்லை. பொது சுகாதாரத்திற்காக, உலகிலேயே மிகக்குறைந்த நிதியை செலவுசெய்யும் நாடுகளின் பட்டியலில் முதல் நான்கு இடத்தில் இந்தியா உள்ளது. ஒவ்வொரு நாடும், தன் தேசிய மொத்த உற்பத்தியில் (GDP), குறைந்தபட்சம் 5 முதல் 6 சதவீதத்தை பொது சுகாதாரத் திட்டங்களுக்கு செலவிட வேண்டுமென்று உலக சுகாதார நிறுவனம் (WHO), கூறியுள்ள நிலையில், 1.2 - 1.3 சதவீதத்தை மட்டுமே இந்தியா ஒதுக்குகிறது. மேலும், தடையற்ற தனியார்மயம் மற்றும் தாராளமயத்தின் விளைவாக, உலகிலேயே மிக அதிகமாகத் தனியார் மயமாக்கப்பட்ட சுகாதார சேவைகளை இந்தியா கொண்டுள்ளது. ஒவ்வொரு இந்தியனும் 78% தன் சொந்த செலவில்தான் மருத்துவம் செய்துகொள்ள வேண்டும்.

இதனால், 3500 பேருக்கு ஒரு மருத்துவர், [WHO - 1000 பேருக்கு ஒரு மருத்துவர்; கியூபா 500க்கு 1] ஒரு லட்சம் பேருக்கு 70 பொதுப் படுக்கைகள் மற்றும் 2.3 தீவிர சிகிச்சைப் படுக்கைகள், (சீனா 420/3.5, இத்தாலி 340/12.5) என்ற நிலையில்தான் கரோனாவை எதிர்கொண்டு வருகிறோம். கேரளா, தமிழ்நாடு போன்ற மாநிலங்கள் ஓரளவு (தேசிய சராசரியை ஒப்பிடும் போது) பொது சுகாதாரத்தில் வளர்ச்சி பெற்றுள்ளன. இருந்தபோதிலும், தமிழ்நாடு  கேரளாவைப் போல கரோனாவைக் கட்டுப்படுத்துவதில் வெற்றி பெறமுடிவில்லை அதற்கு, கேரள அரசைபோல், மக்கள் மீது அக்கறையும் அறிவுப்பூர்வமான அணுகுமுறையும் தமிழக அரசுக்கு இல்லை என்பதுதான் காரணம். 24 அரசு மருத்துவக் கல்லூரி மருத்துவமனைகள் & 24 தனியார் மருத்துவக்கல்லூரி மருத்துவமனைகளும் தமிழ்நாட்டில் இருந்தபோதும், வைரஸ் தொற்று தொடர்ந்து உயர்ந்து வருவதைக் காணமுடிகிறது. மகாராஷ்டிரா மாநிலம் - தனியார் துறை பெரிய வளர்ச்சிபெற்றுள்ள போதிலும், பொது சுகாதாரக் கட்டமைப்பு பலவீனமாக இருப்பதால், மிகப்பெரிய எண்ணிக்கையில் நோய்த்தொற்றையும், இறப்புகளையும் சந்தித்து வருகிறது. அதே போல பலவீனமான பொது சுகாதாரக் கட்டமைப்புடன், அரசியல் காரணங்களும் ஒன்று சேர, குஜராத், மத்தியப்பிரதேசம், பீகார், உத்திரப்பிரதேசம், மேற்கு வங்கம் போன்ற மாநிலங்கள் மிகப்பெரிய எண்ணிக்கையில் இறப்புகளை எதிர்கொள்கின்றன. தேசிய அளவில், கொரோனாத் தொற்று இறப்பு விகிதம் 3.5% ஆக இருக்கும் போது, மேலே குறிப்பிட்ட மாநிலங்களில் 5 முதல் 10 சதவீதம் இறப்புகள் நிகழ்ந்து வருகின்றன.

பெரிய தனியார் மற்றும் கார்ப்பரேட் மருத்துவமனைகள், வசதிபடைத்த பணக்காரர்களுக்கு மட்டுமே "கோவிட்-19" சிகிச்சையளித்து வருகிறார்கள். தொற்று அறிகுறியுடன் உள்நோயாளியாக அனுமதிக்கப்படுபவர்களுக்கு கூட பரிசோதனைகளுக்காக ஓரிரு நாட்கள் சிகிச்சையளித்து விட்டு, அரசு 'கோவிட்" மருத்துவமனைகளுக்கு அனுப்பிவைத்து விடுகிறார்கள் நோய்த்தொற்றை உறுதிப்படுத்த செய்யப்படும். 'RT - PCR' என்ற பரிசோதனையை இலவசமாக செய்யவேண்டுமென உச்சநீதிமன்றம் கூறியபோது, கார்ப்பரேட் மருத்துவமனைகளும், தனியார் ஆய்வகங்களும் அதை ஏற்க மறுத்து, அவர்களுக்கு சாதகமான நீதிமன்ற ஆணையைப் பெற்றனர். கார்ப்பரேட் மருத்துவமனைகள் வளர்ந்ததன் மூலம் "மருத்துவ சுற்றுலா (MEDICAL TOURISM)வும், மருத்துவ வணிகமும் பல பில்லியன் டாலர்களுக்கு வளர்ந்துள்ளது. சாதாரண நாட்களில் ''நாங்க இருக்கோம்"; நாங்க பார்த்துக்கிறோம்' என்று விளம்பரம் செய்யும் கார்ப்பரேட்டுகள், இந்தக் கரோனாத் தொற்றுக் காலத்தில் காணாமற் போய்விட்டார்கள்.

கரோனாத் தொற்று பரவலைத் தடுப்பதிலும், சிகிச்சையளிப்பதிலும் பல புதிய சவால்களை நாம் சந்திக்க வேண்டியுள்ளது. பொது சுகாதாரக் கட்டமைப்பின் பலவீனத்தாலும், பற்றாக்குறையாலும் மருத்துவர் உள்ளிட்ட மருத்துவப் பணியாளர் நோய்த் தொற்றுக்கு ஆளாவதும், சிலர் இறந்துபோகவும் நேரிட்டுள்ளது.10க்கும் மேற்பட்ட மருத்துவர்கள் இறந்துள்ளனர். தரமான பாதுகாப்புக் கவசங்களையும், பரிசோதனைக் கருவிகளையும் உரிய நேரத்தில் வழங்காதது; உரிய பயிற்சி அளிக்காதது; தேவையான எண்ணிக்கையில் மருத்துவப் பணியாளர்களை நியமிக்காதது; அவர்களுக்கு தேவையான உணவு மற்றும் உறைவிடங்கள் ஏற்பாடு செய்யாதது போன்ற பல காரணங்கள் உள்ளன. இருந்தபோதிலும், ஏற்கனவே பற்றாக்குறையில் உள்ள மருத்துவர், செவிலியர் போன்ற மருத்துவப் பணியாளர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு மத்திய, மாநில அரசுகளுக்கு உண்டு என்பதை அவர்கள் உணரவில்லை.

பொது சுகாதாரக் கட்டமைப்பின் மூன்றாவது முக்கிய அம்சம் மருந்து / மருத்துவ உபகரணங்கள் மற்றும் மருத்துவ ஆராய்ச்சி குறித்ததாகும். "மேக் இன் இந்தியா" என்று வெற்றுக்கோஷத்தை நீட்டி முழக்கினார்கள். ஆனால் பொதுத்துறையில் மருந்து மற்றும் உபகரணங்கள் தயாரிப்பதை தவிர்த்து, கார்ப்பரேட் மற்றும் பன்னாட்டு நிறுவனங்களுக்கு ஊக்கம் அளித்ததன் விளைவு, கரோனாப் பரிசோதனைக்கான கருவிகளை (Test Kits) சீனாவிடமிருந்தும், தென்கொரியாவிடமிருந்தும் வாங்கவேண்டியுள்ளது.

அமெரிக்க அதிபர் டிரம்ப்-இன் மிரட்டலுக்குப் பயந்து, ஹைட்ராக்ஸி குளோரோகுயின் மாத்திரைகளை ஏற்றுமதி செய்ததன் மூலம் பல தனியார், கார்ப்பரேட் நிறுவனங்களே பயனடைந்துள்ளனர். ''மருத்துவ ஆராய்ச்சி'' என்பது கிட்டத்தட்ட கைவிடப்பட்ட ஒன்று ''தேசிய மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தின் (IMCR), செயல்பாடும், வெளிப்படைத் தன்மையுடனும், அறிவியல் அடிப்படையிலும் இல்லை. ஹிந்துஸ்தான் லேடக்ஸ் லிமிடட் (HLL), போன்ற பொதுத்துறை நிறுவனங்களை சீரமைத்து, மருத்துவ பரிசோதனைக் கருவிகள், பாதுகாப்புக் கவசங்கள் முதலியவற்றை நம் நாட்டிலேயே தயாரித்திருக்க முடியும். கரோனாத் தடுப்பூசித் தயாரிப்பதற்கு HLL நிறுவனத்தின் துணை நிறுவனமான செங்கல்பட்டில் அமைந்துள்ள ஹிந்துஸ்தான் பயோலாஜிகல் லிமிட்டெட் (Hindustan Biological Limited HBL) நிறுவனத்தில் முதலீடு செய்து பயன்படுத்தியிருக்கலாம். மாறாக தனியார் நிறுவனமான பாரத் பயோடெக் நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்துள்ளது.

இதுவரை தடுப்பூசியோ, சிகிச்சைக்கான மருந்தோ கண்டுபிடிக்கப்படாத நிலையில், "மந்தை நோய்எதிர்ப்புசக்தி" அல்லது ''திரள் நோய்எதிர்ப்புசக்தியை'' (HERD IMMUNITY) குறித்து கருத்தாக்கம் பொதுவெளியில் பேசப்படுகிறது. ''திறன் எதிர்ப்புசக்தியை தடுப்பூசிகளைக் கொண்டு உருவாக்குவதுதான் மருத்துவ ரீதியாகப் பாதுகாப்பானது. மாறாக குறைந்தபட்சம் 60 முதல் 70 சதவீத மக்களுக்கு நோயைப் பரப்புவதன் மூலம் இதனை அடையலாம்'' என்ற நடைமுறை இந்தியா போன்ற அதிக மக்கள் தொகை கொண்ட நாட்டுக்கு ஆபத்தானது. கரோனோத் தொற்று ஏற்பட்டால், 5% பேருக்கு தீவிர சிகிச்சை தேவைப்படலாம். அதில் இறப்போர் எண்ணிக்கை 1% என்று எடுத்துக்கொண்டாலும், பல லட்சம் பேர் இறந்து போக நேரிடும். இது போன்ற எண்ணிக்கையில் தொற்று ஏற்பட்டால் பலவீனமான சுகாதாரக் கட்டமைப்பால் எதிர்கொள்ள முடியாது. எனவே ''தடுப்பூசி பயன்பாட்டிற்கு வந்து "திரள் நோய்எதிர்ப்புசக்தி" வரும் வரை, சமூக இடைவெளி, தனிமனித சுகாதார முறைகள் மூலம் மக்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதை தவிர வேறுவழியில்லை. வலுவற்ற பொது சுகாதாரக் கட்டமைப்பின் பின்னணியில், ICMRன் சமீபத்திய அறிவுறுத்தலைப் புரிந்து கொள்ளவேண்டும். "தொற்று உறுதி செய்யப்பட்டவர்கள் கூட வீட்டிலேயே இருந்து சிகிச்சை பெறலாம்; மருத்துவமனையில் சிகிச்சைபெறுவோரில். தீவிர நோய்த் தொற்று தவிர பிறருக்கு, ''நோயத்தொற்று இல்லை'' என்பதை உறுதிசெய்யத் தேவையில்லை'' போன்ற வழிகாட்டுதல்கள் பலவீனமான பொதுசுகாதாரக்

கட்டமைப்பை நம்பி வரும் நாட்களில் மக்கள் சிகிச்சைபெற முடியாது என்பதை உணர்த்துகிறது.

கரோனாத் தொற்றை ஒரு வாய்ப்பாக கருதி, பொதுசுகாதாரத்திற்கு அதிக நிதி ஒதுக்கீடு செய்து, உள்கட்டமைப்பை வலுப்படுத்த உடனடியாக மத்திய மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்கவேண்டும். மாநிலந்தோறும் தொற்று நோய் ஆராய்ச்சி நிலையங்களையும், (புனேயில் உள்ள தேசிய வைரஸ் இயல் நிறுவனம் போல), மாவட்டந்தோறும் தொற்று நோய் சிறப்பு மருத்துவமனைகளையும் நிறுவவேண்டும். பொது சுகாதாரத்தில் தனியார் மயம் முழுவதுமாகக் கைவிடப்படவேண்டும். அனைவருக்கும் இலவசமாக அடிப்படை சுகாதார சேவைகள் கிடைக்கவேண்டும். அப்போதுதான் கரோனா தொற்றிலிருந்து தப்பித்தாலும், எதிர்காலத்தில் வரவிருக்கும் பல்வேறு கொள்ளை நோய்களிலிருந்து இந்திய மக்களைக் காப்பாற்ற முடியும்.

# சிறு குறு தொழில்களே நெருக்கடிக்கான தீர்வு

**முத்துக்கண்ணன்**

கொரோனா வைரஸ் தொற்று உலகளாவிய அளவில் கண்ணுக்கு தெரியாத எதிரியாய் மக்களோடு யுத்தம் நடத்தி வருகிறது. இதிலிருந்து மக்களை விடுவிப்பதற்கு, மீட்டெடுப்பதற்கு, தீர்வு காண்பதற்கான திட்டங்களும், செயல்பாடுகளும் உலக நாடுகளில் உள்ள ஆளும் அரசுகளை இரண்டு பிரிவாக பிரித்து விட்டது.

மக்களின் உண்மையான நண்பர்கள் யார் ? என்பதை உலகம் அறிய தொடங்கிவிட்டது. பேரிடர் காலத்திலும் இந்தியா உட்பட பொதுக்கட்டமைப்பு, பொது சுகாதாரம், பொது விநியோகம் என அரசு கட்டுப்பாட்டில் இருந்த இடங்களில் இதன் செயல்பாடு எப்படி மக்களை மீட்டெடுத்தது. இது தனியார் முதலாளிகள் கையில் இருந்தபோது லாபத்தை மட்டுமே பார்த்து மக்களை சீரழிக்கிறது என்பதை மக்கள் உணரும் தருணமிது.

கோவிட் 19 வைரசிற்கு ஒரு நாட்டின் பெயரை, ஒரு மதத்தின் பெயரை, ஒரு இனத்தின் பெயரை வைத்து மக்களை கூறு போடும் நடவடிக்கைகளை வகுப்புவாத சக்திகளும் மோடி அரசாங்கமும் செய்து வருகிறது. தங்களது தவறுகளில் இருந்து பாடம் கற்பதற்குப் பதிலாக பிரச்சனைகளை திசை திருப்புகிறது. உலகின் அதிகம் பாதிக்கப்பட்ட நாடாக அமெரிக்கா உள்ளது. அதிக உயிரிழப்பும், பாதிப்பும் இதனால் பொருளாதார முடக்கமும் அதிகரித்துள்ளது.

மோடி அரசு பெரும் கார்ப்பரேட்கள் நலனில் மட்டுமே அக்கறையோடு செயலாற்றுகிறது. இந்த 6 ஆண்டுகளில் இந்தியாவின் முதல் 63 பெரும் பணக்காரர்களுக்காக கடந்த 6 ஆண்டுகளில் ரூ. 11 லட்சம் கோடிக்கு மேல் வங்கிக் கடன் தள்ளுப்படி, வரிச்சலுகைகள் என வழங்கியுள்ளது. ஒரு பகுதி பன்னாட்டு கம்பெனிகளில் பொருளாதார நெருக்கடி என்ற உடன் நிதிச் சந்தையில் தங்களது முதலீடுகளை திரும்ப எடுத்துக் கொண்டு ஓடி வருகின்றன.

இத்தகைய நிலையில் அரசின் கொள்கைகள் எத்தகைய தாக்குதல் தொடுத்தாலும் இந்திய பொருளாதாரத்தை கட்டமைப்பதில் பெரும் பங்காற்றி வருவது சிறு குறு நடுத்தரத் தொழில்களும், விவசாயத் துறையுமே ஆகும். தேவைக்கேற்ப அளிப்பு இல்லாத நிலையில் பணவீக்கம் உயர்ந்த வண்ணம் உள்ளது. இதை சமாளிக்க வேண்டும் என்ற பெயரில் அதிக கடன் வாங்கினால் வட்டி விகிதம் கூடி உற்பத்தி செலவு கூடி மீண்டும் அதிகமாகும். சிறு குறு நிறுவனங்களுக்கான அரசின் உதவிகளை திட்டமிட்டு குறைக்கும் ஏற்பாடுகளை செய்கிறார்கள். வங்கிக்கடன்கள் குறித்த நிபந்தனைகளை கடுமையாக்குவதும், வட்டி விகிதங்களை கூட்டுவதுமாக உள்ளது. இந்நிலை கிராமப்புற விவசாயிகளின் மீதும் விவசாய கடன், வட்டி, மானியங்களின் மீதும் கடும் தாக்கத்தை செலுத்துகிறது. இடுபொருள் செலவு அதிகரிப்பும், குறைந்தபட்ச ஆதார விலை குறைப்பும் விவசாயத் துறையை நெருக்கடிக்கு உள்ளாக்குகிறது. இந்த கொரோனா காலத்தில் மட்டும் 14 கோடி பேருக்கு வேலையிழப்பு ஏற்பட்டுள்ளதாக புள்ளிவிபரங்கள் கூறுகின்றன. அரசின் கடந்த காலச் செயல்பாடுகளில் உயர்பண மதிப்பு நீக்கம், ஜிஎஸ்டி நடைமுறை, சுங்கக் கட்டணம், பெட்ரோலிய பொருட்கள் விலைஉயர்வு, ஏற்றுமதி, இறக்குமதி கொள்கைகள் தொழில்களுக்கு கடும் நெருக்கடியை உருவாக்கி வருகின்றன.

பெரும் கார்ப்ரேட் குழுமங்களின் வளர்ச்சி விகிதம் குறைவாக இருந்த காலத்தில் சிறு, நடுத்தரத் தொழிற்சாலைகளின் வளர்ச்சிவிகிதம் முக்கிய பங்காற்றின. ஏனெனில் நேரடியான வேலைவாய்ப்பையும், பணச் சுழற்சியையும் உருவாக்குகிறது. ஆனால் இந்த நிதியை பெறுவது சிறு குறு தொழில்களுக்கும், ஏழைகளுக்கும், கிராமப்புறத்தினருக்கும் கடினமானதாகவே உள்ளது. இந்தியா போன்ற நாடுகளில் வறுமையை ஒழிக்க, வேகமான, விரிவான, அனைவரையும் உள்ளடக்கிய வளர்ச்சி தேவை.

இக்காலத்தில் இத்தொழில்களுக்கு கணிசமான உதவியும், அதிக அளவிலான உத்தரவாதம் கோராமல் வங்கிகள் கடன் அளிப்பதும், வட்டிக்கான மானியத்தை அரசே ஏற்பதும் அவசியம். ஏற்கனவே பெற்ற

கடன்களை திரும்ப செலுத்துவதற்கான கால அளவை ஓராண்டுக்கு நீட்டிப்பதும், அபராத நடவடிக்கைகளை பேரிடர் காலத்தில் நிறுத்தி வைப்பதும் அவசியமான நடவடிக்கையாகும். உதாரணத்திற்கு மத்திய அரசு கொரோனா ஊரடங்கு காலத்தில் 50 கார்ப்ரேட் முதலாளிகள் வாங்கியிருந்த  ரூ. 68,500 கோடி  கடன் தள்ளுபடி செய்துள்ளது அம்பலமாகியுள்ளது. கடந்த 6 ஆண்டுகளில் தள்ளுபடி செய்யப்பட்டுள்ள ரூ. 11 லட்சம் கோடியை சிறு, குறு, நடுத்தர தொழில்களில் முதலீடு செய்தால் என்ன விளைவு உருவாகும் என்பதை பார்ப்போம்.

உற்பத்தி சார்ந்த தொழில் நிறுவனம் துவங்க 5 கோடி ரூபாய் அரசு அளித்தால், அதன் மூலம் நேரடியாக சுமார் 400 பேரும், மறைமுகமாக 1,000 பேரும் வேலைவாய்ப்பு பெற வழியேற்படும். கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு விலக்கு அளித்த தொகையில் சுமார் 2.25 லட்சம் சிறு குறு தொழில் நிறுவனங்களை துவங்கிட முடியும். இதன் மூலம் 12 கோடி பேருக்கான நேரடி மற்றும் மறைமுக வேலைவாய்ப்புகளை உருவாக்க முடியும். ஆளும் அரசுகளும், பெரும் முதலாளித்துவ நிறுவனங்களும் லாபம் என்ற ஒற்றைக் கோட்பாட்டை மட்டும் நிலைநிறுத்தவே முயற்சிக்கிறது, தனது சமூகக் கடமையை புறந்தள்ளுக்கிறது. இதனால் தேசத்தின் கட்டமைப்பில் வேலையின்மையை குறைக்கும் நடவடிக்கையை கைவிடுகிறது. இன்றைய உலகமயமாக்கல் கொள்கை நிதி மூலதனச் சந்தையில் தங்கு தடையின்றி செல்ல இருக்கும் கட்டுப்பாடுகளை முற்றாக நிராகரிக்கிறது. இதனை சமநிலைப்படுத்த சிறு,குறு, நடுத்தர தொழில்நிறுவனங்களில் பணியாற்றும் தொழிலாளர்களின் நலனை பாதுகாக்கும் தொழிலாளர் நலச் சட்டங்களின் மீதும் கடும் தாக்குதலை தொடுக்கிறது.

எனவே இத்தொழில் நிறுவனங்களில் உள்ள தொழிலாளர்களை பாதுகாப்பதும் முக்கிய கடமையாக மாறுகிறது. சிறு, குறு, நடுத்தர தொழில்களையும், கிராமப்புற விவசாயத்தையும் பாதுகாப்பதில் மத்திய மாநில அரசுகள் இணைந்து பணியாற்றுவதும், அதற்கான உரிய திட்டமிடலுமே இன்றைய தலையாய கடமையாகும்.

# நகரமயமாக்கலும் கொரோனாவும்

**T.K. சண்முகம்**

கொரோனா விஸ்வரூபத்தை கண்டு சர்வதேச சமூகம் கதிகலங்கி நிற்கிறது. இந்தியாவும் இதற்கு விதிவிலக்கல்ல. தொற்றைக் கட்டுப்படுத்துவதற்கு வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு விதமான வழிமுறைகளை அந்தந்த நாட்டு அரசுகள் மேற்கொண்டன. ஒரே நாட்டில் உள்ள பல்வேறு மாநில அரசுகளும் ஒவ்வொரு விதமான அணுகுமுறைகளை கையாண்டன.

இந்தத் தொற்றின் தீவிரத்தால் நமது ஒட்டுமொத்த வாழ்க்கை சூழலும் முடங்கிக் கிடக்கின்றன. தனியார் மருத்துவ மனைகள் அனைத்தும் மூடிக்கிடக்க, அரசு மருத்துவமனைகள் ஓவர்டைம் போட்டு சேவை ஆற்றிக் கொண்டிருக்கின்றன. பிழைப்பிற்காக நகரங்களுக்கு இடம்பெயர்ந்து வந்த கிராமத்து தொழிலாளர்கள் சொந்த ஊர் திரும்ப போராடிக் கொண்டிருக்கின்றனர்.

இப்படிப்பட்ட பல உண்மைகள் கொரோனாவால் வெளிச்சத்திற்கு வந்துள்ளன. வர்க்கம் பார்த்து, வர்ணம் பார்த்து, மதம் பார்த்து, அது தாக்கவில்லை என்றாலும், நகர்ப்புறங்களை வீரியத்துடன் தாக்கிக் கொண்டிருக்கிறது கொரோனா. அமெரிக்காவின் நியூயார்க் தொடங்கி இந்தியாவில் டெல்லி, மும்பை, சென்னை என நகர்ப்புறங்கள் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் இத்தொற்றால் பாதிக்கப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கையில் சரிபாதிக்கு மேல் சென்னையில்தான் என்பதிலிருந்தே நகரங்களை நோக்கிய கொரோனா பாய்ச்சலை புரிந்து கொள்ள முடியும்.

நகரங்களை நோக்கிய கொரோனாவின் கோபத்திற்கு காரணம் என்ன? நெரிசல் மிக்க வசிப்பிடங்களில் மக்கள் குவியலாக வாழ்வதுதான் நோய் பரவக் காரணம் என்று ஆட்சியாளர்கள் கூறுகின்றனர். சர்வதேச தொடர்பு மையமாக நகரங்கள் இருப்பதும் மற்றொரு காரணமாக கூறுகின்றனர். கொரோனா தொற்றை கட்டுப்படுத்துவதில் ஆட்சியாளர்களுக்கு ஏற்பட்டுள்ள இயலாமையை - தோல்வியை மூடி மறைப்பதற்கான முயற்சியே அரசு சொல்லும் காரணங்களாகும்.

நோய் பெருக்கத்திற்கு இதுவரை தாம் உருவாக்கி வைத்திருக்கிற நகரக் கட்டமைப்பு காரணமல்ல; அடர்த்தியான பகுதிகளில் இருந்து கொண்டு, சமூக விலகலை கடைப்பிடிக்காத மக்கள்தான் காரணம் எனக் கூறி அரசு தப்பிக்க நினைக்கிறது.

இத்தகைய மோசமான சூழ்நிலையில் கூட ஆட்சியாளர்களின் பொறுப்பற்ற பொய்யுரையைக் கண்டு சமூக ஆர்வலர்கள் முகம் சுளிக்கின்றனர். இது ஏதோ கொரோனாவோடு முடிந்து விடக்கூடிய பிரச்சினையல்ல. இன்றைய நகரங்களின் கட்டமைப்பு தன்மையை கேள்விக்குள்ளாக்கி ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய முக்கியமான பிரச்சனையாகும். நகரமயமாக்கலை அதன் போக்கிலேயே விட்டுவிட்டு, அடிப்படை வசதிகளற்ற, பலவீனமான கட்டமைப்பை போற்றிப் பாதுகாத்து வருகின்ற ஆட்சியாளர்கள் குற்றவாளிகள் இல்லையா?

நகர வளர்ச்சியும், நகரமயமாக்கலும்

வீட்டு வசதி, உணவு பாதுகாப்பு, பொது சுகாதாரம், தரமான பொதுக்கல்வி, உத்தரவாதமான வேலைவாய்ப்பு, பொது போக்குவரத்து வசதி, சாக்கடை நீர் கலக்காத சுத்தமான குடிநீர், கழிவுநீர் மேலாண்மையின் ஒரு பகுதியான பாதாள சாக்கடை திட்டம் , குப்பையற்ற நகரத்திற்கு அடிப்படையான திடக்கழிவு மேலாண்மை, ஆறுகள் மற்றும் நீர்நிலைகள் உள்ளிட்ட இயற்கை வளங்களைப் பாதுகாத்தல், மாசற்ற காற்று, மக்கள் நலன் சார்ந்த நிலையான கட்டமைப்பு கொண்ட நகர வளர்ச்சியை அரசுதானே உருவாக்க முடியும். கொரோனா தொற்றுப் சமூகப்பரவலாக மாறி அச்சுறுத்திக் கொண்டிருக்க கூடிய சென்னையில் பாதிக்கப்பட்ட இடங்கள் முழுவதும் குடிசைப்பகுதிகள்தான் (Slum) என்பதற்கு தனியாக ஆய்வு எதுவும் தேவை இல்லை. நோய் கட்டுப்பாட்டு பகுதி (Containment Zone) என்று சென்னை மாநகராட்சியயால் சீல் வைக்கப்பட்ட 500க்கும் மேற்பட்ட குடிசை பகுதிகளில் வசிப்பவர்கள் யார்? இந்த பகுதியிலுள்ள ஏழை, எளிய கூலி உழைப்பாளர்கள்தான் இன்று நோயோடும், பசியோடும் போராடிக் கொண்டிருப்பவர்கள். கிராமத்திலிருந்து பிழைப்பு தேடி வந்த இந்த மக்கள் விரும்பி ஏற்றுக்கொண்ட வாழ்க்கையா இது? இந்த மக்கள் மீது பழிபோட்டு அரசு தப்பித்துக் கொள்ளக்கூடாது.

நகர அபிவிருத்திக்கான ஐ.நா.சபை மாநாடு 21ஆம் நூற்றாண்டின் முக்கிய நெருக்கடிகளில் ஒன்றாக நகரமயமாக்கலை அடையாளம் காட்டியது. நகர்ப்புற வாழ்க்கையில் நிலவும் நிச்சயமற்ற சூழலையும் ஐ.நா.சபை மாநாடு சுட்டிக்காட்டியது.

நாடு முழுவதிலும் உள்ள கிராமங்களிலிருந்து 13.9 கோடிப்பேர் நகரங்களை நோக்கி வருகிறார்கள். இந்திய பொருளாதார ஆய்வறிக்கை 2017இன் படி மாநிலம் விட்டு மாநிலம் செல்லும் தொழிலாளர்களின் எண்ணிக்கை 90 லட்சம். 13 கோடி தொழிலாளர்கள் சொந்த மாநிலத்துக்குள்ளேயே நகரம் நோக்கி வந்தவர்களாவர். நகரங்களை நோக்கி வருகின்ற இந்த தொழிலாளர்களில் கட்டுமான தொழிலில் 4 கோடி பேரும், 1 கோடி பேர்

செங்கல் சூளையிலும் பணியாற்றுபவர்கள். 2 கோடி பேர் வீட்டு வேலையிலும், 1.1 கோடி பேர் ஜவுளி தொழிலிலும், மற்றவர்கள் இதர தொழில்களிலும் பணியாற்றிக் கொண்டிருக்கின்றனர்.
தமிழகத்தின் ஒட்டுமொத்த தொழில் உற்பத்தியில் 75 சதவீத பங்களிப்பை சென்னை, காஞ்சிபுரம், திருவள்ளூர், கோவை, திருப்பூர் அளிக்கின்றன. மீதம் உள்ள மாவட்டங்களின் பங்கு 25 சதமே.
கிராமப்புற வாழ்வாதாரம் சரிந்து போனதால், கிராமத்தை விட்டு பிழைப்பு தேடி நகரங்களுக்கு செல்வது உழைக்கும் மக்களுக்கு அவசியமாகிறது. அதே நேரத்தில் பெருந்திட்டங்களை மையப்படுத்திய நகர வளர்ச்சிக்கு மலிவான உழைப்பாளிகள் (Cheap Labour) தேவை கட்டாயமாகிறது. எந்த ஒரு கிராமத்தானும், நகரங்களின் பிரம்மாண்ட தோற்றத்தை தரிசிப்பதற்காக விரும்பி நகரத்திற்கு வரவில்லை. பிழைப்புக்கு வழியின்றி நகரத்தை நாடி வந்தவர்கள் இவர்கள்.
லட்சக்கணக்கில் நகரத்திற்குள் நுழையும் இந்த உழைப்புப் படையை உள்வாங்கிக் கொண்டு, அதற்கேற்ற வகையில் நகர கட்டமைப்பை மேம்படுத்தி, ஒரு கண்ணியமான வாழ்க்கையை அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுப்பதில் ஆட்சியாளர்கள் தோல்வி அடைந்து விட்டனர்.
ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவ சமூக அமைப்பில் நகரத்தை நோக்கி மக்கள் திரள்வது தவிர்க்க முடியாததாகி விட்டது.
2026இல் டில்லிக்கு அடுத்தபடியாக தமிழகத்தில் நகர்ப்புற மக்களின் எண்ணிக்கை 74.8 சதமாக அதிகரிக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது. நகர்ப்புற மக்கள் தொகையில் கிட்டத்தட்ட சரிபாதி மக்கள் குடிசைப் பகுதிகளில் வசிக்கின்றனர் என்பதை அலட்சியப்படுத்திவிடக்கூடாது.
தற்போதைய நவீன உலகமய போட்டியில் கார்ப்பரேட் மயமாக்கப்பட்ட சந்தைக்கும், நகர கட்டமைப்பு திட்டங்களை உருவாக்கி அமல்படுத்த வேண்டிய அரசிற்கும் ஒரு நெருக்கமான பிணைப்பு உள்ளது. எப்படிப்பட்ட நகர்ப்புற வளர்ச்சி, அரசின் பொது நிதியாதாரம் எதற்கு, எப்படி, எங்கே செலவு செய்ய வேண்டுமென்பதை தீர்மானிப்பது இந்த கார்ப்பரேட் சந்தைதான். இந்த சந்தைக்கு இணக்கமாக அரசு மற்றும் மாநகராட்சிகள் செயல்படுகின்றன.
எனவேதான் நகரமயமாக்கல் மக்களின் நல்வாழ்விற்காக நடைபெறுவதை விட, சர்வதேச நிதி மூலதனத்தின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே நடைபெறுகிறது. ஸ்மார்ட் சிட்டி துவக்க விழாவில் "நகரமயமாக்கல் சாபமல்ல, அது வரம்" என்று பிரதமர் மோடி திருவாய் மலர்ந்ததும் சந்தையின் தேவைக்காகவே.

வேலை, கல்வி, குடியிருப்பு, சுகாதாரம் உள்ளிட்ட மக்களின் அடிப்படை தேவைகளை அவசியம் என்று கருதக்கூடிய நிலையான நகர கட்டமைப்பு சிறப்பு திட்டங்கள் உருவாக்கப்பட வேண்டும். குடிசைப் பகுதி மக்களின் நலன்களை முதன்மை இலக்காக கொண்டு மாபெரும் மக்கள் இயக்கம் நடைபெறும்போதுதான் நகரமயமாக்கல் தறி கெட்டுப் போகாமல் தடுக்க முடியும்.

# *கொரோனா காலத்தில்* பெண்கள் மீதான வன்முறை

ச. லெனின்

கொரோனா ஊரடங்கு காலம் எல்லோரையும் முடக்கிப்போட்டது. குடும்ப வன்முறையோ இந்த காலத்தில் முடங்கிப் போகாமல் மேலும் அதிகரித்துள்ளது என்கின்றன புள்ளிவிவரங்கள். உலகளவில் சுமார் முப்பது சதவீத குடும்ப வன்முறைகள் இக்காலத்தில் உயர்ந்துள்ளது. இந்தியாவைப் பொறுத்தவரை தேசிய பெண்கள் ஆணையத்திற்கு குடும்ப வன்முறைகள் குறித்து வரும் புகார்களின் எண்ணிக்கை இந்த ஊரடங்கு காலகட்டத்தில் இருமடங்கு உயர்ந்துள்ளது.

**வீட்டில் இருப்பது பாதுகாப்பா..?**

கொரோனா பரவலில் இருந்து நம்மைப் பாதுகாத்துக்கொள்ள “வீட்டிலேயே இருங்கள்” என்று அறிவுறுத்தப்பட்டோம். சமூக இடைவெளியை கடைப்பிடிக்க கேட்டுக்கொள்ளப்பட்டோம். ஆனால் பல பெண்களுக்கோ வீடே பாதுகாப்பற்றதாகத்தான் உள்ளது. பெண்களிடம் “சமூக இடைவெளியை” எப்போதும் நம் ஆணாதிக்க சமூக அமைப்பு கடைப்பிடிப்பதே இல்லை. ஏனெனில் பெண்களை உடைமையாகக் கருதுவதும், அந்த உடைமையின் உரிமையாளன் என்கிற வகையில் அவர்கள் மீதான உரிமையும் ஆண்களுக்கே என்ற போக்குமே இதற்கு அடிப்படையாக உள்ளது.

பெண்களை சகமனுஷியாகப் பார்க்காமல் அவர்களை “உற்பத்திக் கருவியாகவும்“ அதன் உடைமையாளனாகவும் ஆணாதிக்க சமூகம் தன்னை நிலை நிறுத்திக்கொண்டது. எனவேதான் கம்யூனிச சமூகத்தில் எல்லா உடைமைகளும் பொதுவுடைமையாகும் என்பதை அறிந்த அவர்கள் பெண்களும் பொதுவாக்கப்படுவார்கள் என்று கூறினர். இத்தகைய பாசாங்கான வழிமுறைகளில் பொதுவில் ஒரு அறச்சீற்றத்தை கையாண்டனர்.

கம்யூனிசம் என்பது உண்மையில் “பெண்கள் வெறும் உற்பத்திக் கருவிகளாக இருக்கும் நிலையை ஒழித்துக்கட்டுவதுதான்” என்று மிகத் தெளிவாகவே கம்யூனிஸ்ட் அறிக்கை பேசியது.

அதே போல் “ஒவ்வொரு சகாப்தத்திலும் ஆதிக்கம் செலுத்திய கருத்துக்கள், அந்தந்த காலத்தின் ஆளும் வர்க்கத்திற்குரிய கருத்துக்களாகவே எப்போதும் இருந்துள்ளது. “ஒருவரின் செயல்பாடுகள் தனி மனிதரின் தனிப்பட்ட செயல் போல் இருந்தபோதும் அவை ஒரு வகையில் சமூகத்தால் கட்டுப்படுத்தப்பட்ட அல்லது வழிநடத்தப்பட்ட தன்னிச்சை செயல்களே ஆகும். அத்தகைய ஆணாதிக்கம் நிறைந்த ஆளும் வர்க்கத்தால் வழிநடத்தப்படும் போக்கின் வெளிப்பாடாகவே குடும்ப வன்முறைகளைப் பார்க்க முடியும்.

குடும்ப வன்முறை, சம்பள வெட்டு, வேலை இழப்புகள் உள்ளிட்ட சமூக பொருளாதார பிரச்சினைகளையும், அதனால் மேல் எழுந்துள்ள மன அழுத்தங்கள், சமூக பதட்டங்கள் ஆகியவைகளை புரிந்து கொண்டு செயல்படும் சரியான பார்வை அரசுக்கு இல்லை.

## சிறு ஆசுவாசமும் பறிபோனது

ஊரடங்கால் புலம் பெயர் தொழிலாளர்களில் உள்ள பெண்கள், குழந்தைகளின் நிலை மிக மோசமாகப் பாதிக்கப்பட்டது ஒரு பக்கமெனில், ஊரடங்கு என்கிற பெயரில் ஒரே கூரையின் கீழ் அடைக்கப்பட்ட பல பெண்கள் மற்றும் குழந்தைகளின் நிலையும் பாதுகாப்பானதாக இல்லை. வேலைக்குச் செல்லாத பெண்களுக்கு முன்பு சமையல் வேலையை முடித்து குழந்தைகளையும், கணவனையும் பள்ளிக்கும், அலுவலகத்திற்கும் அனுப்பிவிட்டு சற்று முதுகு சாய்க்கவேனும் சிறிது நேரம் கிடைக்கும். ஆனால் தற்போது எல்லோரும் வீட்டில் உள்ள நிலை எல்லா நேரமும் அவர்கள் அடுப்படியிலேயே இருக்கவேண்டியது என்றாகிவிட்டது. வேலைக்குச் செல்லும் பெண்களோ வீட்டு வேலை, வீட்டிலிருந்தபடியே அலுவலக வேலை என இரண்டையும் சிரமத்தோடு மேற்கொள்கின்றனர். பெண்களுக்குள்ள இந்த வழக்கமான கொடுமைகளுக்கு மத்தியில்தான் குடும்ப வன்முறைகளும் அதிகரித்துள்ளது.

வார்த்தைகளால் வாட்டுவது, செயல்களால் வதைப்பது, அடிப்பது, பல்வேறு வகைகளில் உடல் ரீதியாகத் துன்புறுத்துவது, மனரீதியாகத் துன்புறுத்துவது, பாலியல் சித்திரவதை என குடும்ப வன்முறை பல வகைகளில் தொடர்கிறது. ஊரடங்கு என்கிற பெயரில் எல்லோரும் ஒரே கூரையின் கீழ் அடைப்பட்டு

உள்ள நிலையில், பல பெண்கள் இதுவரை பெற்றுவந்த சிறு பொழுது ஆசுவாசத்தையும் முற்றாக பறித்துவிட்டது. முன்பு குடும்ப வன்முறையால் ஒரு பெண் பாதிக்கப்பட்டால் கணவன் வேலைக்குச் செல்லும்போதோ, ஏதேனும் ஒரு இடைவெளியிலோ தனது சொந்தங்களைத் தொடர்பு கொண்டு பிரச்சினையை சொல்ல முடியும். பொருளாதார ரீதியாகவும், சமூக ரீதியாகவும் மிகவும் கீழ் நிலையில் வைக்கப்பட்டுள்ள பெண்கள் இந்த கொரோனா காலத்தில் முழு நாளும் “எல்லா அதிகாரமும் பெற்ற“ ஆண்களின் கண் பார்வையில் நிறுத்தப்பட்டுள்ளனர். கொடுமைக்காரர்களின் கைப்பிடியிலிருந்து சற்று நகரவும்கூட வாய்ப்பற்றதாகிவிட்டது சூழல். அருகில் உள்ள உறவினர்கள் நண்பர்கள் வீட்டுக்கு அடைக்கலம் தேடிப் போகவும் வழி இல்லை. பொது போக்குவரத்தெல்லாம் இல்லாத நிலையில் புகார் தெரிவிக்கவோ கொடுமைகளிலிருந்து  தப்பிச் செல்லவோ வழியற்ற நிலையிலேயே இன்று பெண்கள் உள்ளனர்.

இப்படியான விஷயங்களையெல்லாம் மாதர் அமைப்புகள் எடுத்துரைத்த பின்பே அரசு சில அறிவிப்புகளை வெளியிட்டது.

**அரசு செய்ய வேண்டியவை**

- பாதிக்கப்பட்ட பெண்ணிடமிருந்து புகார் கிடைக்கபெற்ற உடனே விரைந்து நடவடிக்கை எடுக்கப்படவேண்டும்
- குடும்ப வன்முறைகளில் பாதிக்கப்பட்டவர்கள் மற்றும் குழந்தைகளுக்கு உணவு மற்றும் தங்கும் ஏற்பாட்டை பாதுகாப்பான சுகாதாரமான தரமான வகையில ஏற்பாடு செய்து கொடுப்பது
- உடனடியாக நிதி உதவிகளை செய்வது.
- பாதிக்கப்பட்ட பெண்ணுக்கும் குழந்தைகளுக்கும் மனநல ஆலேசனைகள் வழங்குவது.
- கணவரை சார்ந்து வாழமுடியாத நிலையில் உள்ள பெண்களுக்கு  வேலைவாய்ப்பு மற்றும் நிதி ஆதாரத்தை உருவாக்கி தருவது
- சட்ட ரீதியான உதவிகள் செய்வது
- குற்றவாளிகள் மீது தாமதமின்றி நடிவடிக்கை எடுப்பது

**குடும்பம் அடிமைகளின் கூடாரம்**

பழமைவாதம் நிறைந்த நிலப்பிரபுத்துவத்துடன் சமரசம் செய்துள்ள இந்திய முதலாளித்துவம் தனது குறைந்தபட்ச ஜனநாயக பங்களிப்பைக் கூட ஆற்றாமலே உள்ளது. இந்திய குடும்ப அமைப்பு முறையில் உள்ள ஆணாதிக்க போக்கின் மீது அது பெரிய அளவில் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. அது வழங்கும் குறைந்தபட்ச ஜனநாயகமும் பெயரளவிலானது தானே அன்றி அது பெண்கள் மீதான ஒடுக்குமுறைகள் உள்ளிட்ட பழமைவாதங்களுக்கு முடிவு கட்டும் செயலை செய்வதில்லை.

Familia என்கிற சொல் துவக்கத்தில் திருமணமானவர்களையும் அவர்களின் குழந்தைகளைக் குறிக்குகின்ற, குடும்பத்தைக் குறிப்பதற்கான சொல்லாக இல்லை. “Famulus என்றால் வீட்டு அடிமை என்று பொருள். Familia என்பது ஒரு நபருக்குச் சொந்தமான அடிமைகளின் மொத்த எண்ணிக்கையைக் குறிக்கும்” என்று எங்கெல்ஸ் “குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்“ என்ற தனது நூலில் சுட்டிக்காட்டுகிறார். குடும்பம் என்ற பழைய அர்த்தத்திலான அடிமை முறையின் உள்ளடக்கத்தை கொண்டே நவீன கால குடும்பமும் உள்ளது. இந்த ஆணாதிக்க உடைமை வர்க்க போக்கே பெண்கள் மீதான வன்முறைகளுக்கு அடித்தளமிட்டுக் கொடுத்து அதைத் தொடர வைக்கிறது. உடனடி நடவடிக்கையாக நடைமுறையில் முன்னெழும் பிரச்சினைகளுக்கான கோரிக்கைகளையும் போராட்டங்களையும் முன்னெடுக்கும்போதே நீண்டகால திட்டமிடலுடன் பிரச்சினைகளின் அடித்தளத்தை உடைக்கும் செயல்முறையையும் இணைக்க வேண்டியுள்ளது.

ரஷ்ய புரட்சிகர பெண் போராளி கொலந்தாய் குறிப்பிடுவது போல் எந்த குடும்ப அமைப்பும் முன்பிருந்த அதே நிலையில் இன்றில்லை. சொத்துடைமையை மையமாக கொண்ட ஆணாதிக்க குடும்ப அமைப்பு முறையும் மாற்றப்பட்டே ஆகவேண்டும். பெண்ணடிமைத் தனத்தை நிலைநிறுத்தியுள்ள சொத்துடைமையை தூக்கியெறியும் பொதுவுடைமை ஒன்றே அதற்கான வழியாகும்.

# உள்ளே வெளியே இரண்டும் ஒன்றுதான்:

## இடம்பெயர் தொழிலாளர்களின் கொரொனா கால போராட்டம்

**ஆதிரன்**

கொரோனா பரவல் மற்ற நாட்டு மக்களின் வழ்க்கையை முடக்கி போட்டது போலவே இந்திய மக்களின் வாழ்க்கையையும் முடக்கிபோட்டது. இந்த பொதுமுடக்கம் அனைத்து தரப்பு மக்களின் வாழ்வாதாரத்தை கடுமையாக பாதித்தாலும், முறைசாரா தொழிலாளர்களையும், இடம்பெயர் தொழிலாளர்களையும், விளிம்புநிலை மக்களான மாற்றுத்திறனாளிகள், மூன்றாம் பாலினத்தவரை கடுமையாக பாதித்துள்ளது. இந்நிலையில் இக்கட்டுரை இடம்பெயர் தொழிலாளர்களின் பாதுகாப்பற்ற வாழ்கையை விவாதிக்கிறது.

தமிழகத்தை பொறுத்தவரையில் அனேகமாக இடம்பெயர் தொழிலாளர்களை அனைத்து மாவட்டங்களிலும் காணமுடிகிறது. குறிப்பாக தொழில் மற்றும் பெரு நகரங்களில் கணிசமான அளவில் இருக்கின்றனர். நகர்ப்புறங்களில் இடம்பெயர் தொழிலாளர்கள் குவிவதற்கு முதலாளித்துவத்தின் நகர்ப்புறத்தை மையப்படுத்திய சமமற்ற வளர்ச்சியே காரணம். சமமற்ற வளர்ச்சியின் காரணமாக நகர்ப்புறங்களில் வேலைவாய்ப்பு பெருக்கமும், கிராமங்களில் வேலையின்மையும் ஏற்பட தொழிலாளர்கள் நகரத்தை நோக்கி பயணப்பட்டனர். நகரத்திற்கு வந்த இடம்பெயர் தொழிலாளர்கள் கட்டுமானம், பொருள் உற்பத்தி மற்றும் பேரங்காடி போன்ற தொழில்களில் பெருமளவு வேலைக்கு அமர்த்தபட்டுள்ளனர்.

பிற மாநிலத்திலிருந்து வந்தவர்கள் மட்டுமல்லாமல் தமிழகதுக்குள்ளேயே மக்கள் ஒரு மாவட்டத்திலிருந்து மற்றொரு மாவட்டதிற்கு புலம்பெயர்ந்து வேலை செய்து வருகின்றனர். ஆக இடம்பெயர் தொழிலாளர்களை பிறமாவட்ட தொழிலாளர்கள், பிறமாநில தொழிலாளர்கள் என இருவகைப் படுத்தலாம். இந்த இரண்டு வகையான தொழிலாளர்களின் நிலைமை தனித் தனியாக விவாதிக்க வேண்டியிருந்தாலும், பொதுவான பிரச்சினைகள் இருக்கின்றன. அவற்றை இங்கு காணலாம்.

முதலாவதாக, உணவுப் பிரச்சினை மிகபெரிய பிரச்சினையாக இருக்கிறது. பொதுமுடக்கத்தின் முதல் வார முடிவில் கையிலிருந்த பணம் தீர்ந்த நிலையில் உணவு பொருட்கள் வாங்க வழியின்றி தவித்தனர். நாட்கள் செல்ல செல்ல, அரிசி, பருப்பு என அரசு, தன்னார்வலர்களின் உதவியுடன் கிடைத்தாலும், காய் வகைகள் வாங்க வழியின்றி தவித்து வருகின்றனர். இரண்டாவதாக, வீட்டு வாடகை தலையாய பிரச்சினையாக மாறியது. கட்டுமான வேலைதளத்தில் தங்கியிருந்த காரணத்தாலும், அரசின் முகாம்களில் அடைக்கலம் புகுந்த காரணத்தாலும் பிறமாநில தொழிலாளர்

ஓரளவு தப்பித்தாலும், பிற மாவட்ட தொழிலாளர்கள் வாடகை பிரச்சினையால் பெருமளவு பாதிக்கப்பட்டுள்ளனர்.

வீட்டு வாடகை வசூலிப்பதில் வீட்டு உரிமையாளர்கள் தாமதப்படுத்த தமிழக அரசு கேட்டுக்கொண்டாலும் வாடைகை பளு பிற மாவட்ட தொழிலாளர் மீது தொடர்ந்து கொண்டிருக்கிறது.

அனைத்தையும் விட சம்பளமின்மை இடம்பெயர் தொழிலாளர்களை கடுமையாக பாதித்திருக்கிறது. பொதுமுடக்க காலகட்டத்திற்கான சம்பளம் கிடைக்கவில்லை என்றாலும், பொதுமுடக்கத்திற்கு முன்னதாக செய்த வேலைக்கான சம்பளம் கிடைக்கவில்லை என இடம்பெயர் தொழிலாளர்கள் குற்றம் சாட்டி வருகின்றனர். பொதுமுடக்கத்தின் நீட்சியும் முன்னர் செய்த வேலைகான சம்பளம் கிடைக்கவில்லை எனும் சூழலும் இடம்பெயர் தொழிலாளர்களை முற்றிலுமாக முடக்கி போட்டுள்ளது. அரசின் நிவாரணமும் இடம்பெயர் தொழிலாளர்களை சென்றடைவதில் சிக்கல்கள் நீடிக்கின்றன.

எடுத்துக்காட்டாக, நலவாரியத்தில் பதிவு செய்தவர்களுக்கு மட்டுமே அரசு நிவாரணம் சென்றடைந்துள்ளது. மற்ற தொழிலாளர்களுக்கு சென்றடையவில்லை. குறிப்பாக பிற மாநில இடம்பெயர் தொழிலாளர்களுக்கு பணப்பயன்கள் கிடக்கவில்லை. இச்சூழல், உள்ளே இருந்தால் பசியால் வாடுதல், வெளியே சென்றால் கொரொனா தொற்றுக்கு ஆளாக நேரிடல் என இடம்பெயர் தொழிலாளர்களை இரட்டை பிரச்சினையில் தள்ளியுள்ளது.

பணமும் இல்லை; சரியான உணவும் இல்லை என்ற நிலையில் இடம்பெயர் தொழிலாளர்கள் தங்களது சொந்த ஊருக்கு செல்ல விரும்புகின்றனர். சொந்த ஊர் சென்றால் குறைந்த பட்சம் உணவு பிரச்சினையில் இருந்தாவது தப்பிக்கலாம் என போராடி வருகின்றனர். பிறமாநில தொழிலாளர்களின் போராட்டத்தை தமிழகம் மட்டுமல்லாமல் தேசம் முழுவதும் இக்காலகட்டத்தில் காண முடிகிறது. மேலும், நாடு முழுவதும் பல இடங்களில் அரசின் உதவியை கூட எதிர்பாராமல் நடந்தே சொந்த ஊர் செல்கின்றனர்.

இப்படியான பயணத்தின் போது நாடுமுழுவதும் பல இடங்களில் இடம்பெயர் தொழிலாளர்கள் உயிரிழக்கும் சம்பவமும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இதன் உச்சபட்சமாக மகாரஷ்ராவிலிருந்து மத்திய பிரதேசம் நோக்கி பயணமான போது தொடர்வண்டியில் அடிபட்டு இடம்பெயர் தொழிலாளர்கள்

இறந்து போனதை குறிப்பிடலாம்.

இந்நிலையில் இடம்பெயர் தொழிலாளர்களின் நலனுக்காக, மத்திய, மாநில அரசுகள் கீழ்கண்ட கோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்ற வேண்டும்.

பொதுமுடக்கதிற்கு முன்னதாக வேலை பார்த்ததற்கான சம்பளத்தை உடனடியாக வழங்க அரசு எற்பாடு செய்ய வேண்டும்.

பொதுமுடக்கதிற்கு பின்னர் அனைத்து இடம்பெயர் தொழிலாளர்களுக்கும் வேலை கிடைக்கும் என்ற உத்திரவாதமற்ற சூழலில், விரும்பியவர்கள் தற்போது இருக்கும் இடத்தில் தொடர்ந்து இருக்கவும், சொந்த ஊர் செல்ல விரும்புபவர்களுக்கு பயணம் செய்வதற்கு முறையான போக்குவரத்து வசதிகளையும் அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்.

பொதுமுடக்க காலகட்டத்திற்கும் ஒப்பந்ததாரரையோ, முதன்மை பணியமர்த்துபவரையோ இடம்பெயர் தொழிலாளர்களுக்கு சம்பளம் வழங்க அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்.

நலவாரியத்தில் பதிவு செய்யாத இடம்பெயர் தொழிலாளர்களை உடனடியாக நலவாரியத்தில் பதிவு செய்ய வேண்டும். வாடகைச் சுமை மற்றும் பொதுமுடக்க கால கட்டத்தில் வங்கிசாரா நபர்களிடமிந்து வாங்கிய கடன்களில் இருந்து விடுபடும் விதமாக வட்டியில்லா கடன்களை நலவாரியம் மூலம் அரசு வழங்கவேண்டும்.

# பெருந்தொற்றை வீழ்த்திய சீனாவின் சோசலிசம்

- இரா.சிந்தன்

உலகம் இதற்கு முன்பு பார்த்திருக்காத ஒரு புதிய கொரோனா வைரஸ் தொற்றுநோய் பரவலை 2019 டிசம்பர் இறுதியில் சீனா முதன் முதலில் எதிர்கொண்டது. பிறகு அது உலகம் முழுவதும் பெருந்தொற்றாக பரவியது.

கொரோனா வைரசை முதன் முதலாக எதிர்கொண்ட நாடு என்ற வகையிலும், குறிப்பிடத்தக்க வெற்றியை சாதித்திருக்கும் நாடு என்ற

வகையிலும் சீன அனுபவங்கள் தனித்துவமானவை. அடுத்தடுத்து புதிய கிருமிகளால் ஏற்படும்  கொள்ளை நோய்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்ற அறிவியலாளர்களின் எச்சரிக்கையை மனதில் கொண்டால் சீனாவின் உடனடி செயல்பாட்டின் படிப்பினைகள் உலக மக்களுக்கு முக்கியமானவை என்பது புரியும்.  மேலும் இது சோசலிசத்தின் மேன்மையையும் உணர்த்துகிறது.

சோசலிசமும் பொது சுகாதாரமும் :

1918 ஆம் ஆண்டு ஸ்பானிஷ் ஃப்ளூ தொற்று நோய் பரவியது. முதல் உலகப்போரைத் தொடர்ந்து இந்த தொற்று கோடிக்கணக்கான உயிர்களை குடித்தது. அப்போதுதான் உருவாகியிருந்த சோசலிச சோவியத் குடியரசிலும் நோய் பாதிப்பு இருந்தது. வி.இ.லெனின் இதற்கென பொது சுகாதார அமைச்சகத்தை ஏற்படுத்தினார். மேலும் அவர் ”உள்நாட்டு யுத்தத்தை எதிர்கொள்வதில் பெற்ற  அனுபவம் அனைத்தையும் தொற்று நோய்களை எதிர்கொள்வதில் பயன்படுத்த வேண்டும்” என குறிப்பிட்டார்.

உலகில் முதன் முறையாக  மையப்படுத்தப்பட்ட, பொது சுகாதார அமைப்பை ஏற்படுத்தியது சோவியத் ஒன்றியத்தில் அமைந்த சோசலிச அரசாங்கமே ஆகும். ஊரக பகுதிகளுக்கும் அது பின்னர் விரிவுபடுத்தப்பட்டது. இது அன்றைய காலத்தின் மிகப்பெரும் சாதனை என ஸ்பானிஷ் ஃப்ளூ பரவல் பற்றிய ‘பேல் ரைடர்’ என்ற புத்தகத்தில் லாரா ஸ்பிண்டி என்ற பத்திரிக்கையாளர் எழுதியுள்ளார்.

அனைத்திலும் முதன்மையானது மனிதர்களின் நலவாழ்வுதான் என்ற அணுகுமுறைதான் முதலாளித்துவ கட்டமைப்பில் இருந்து சோசலிசத்தை வேறுபடுத்துகிறது. கியூபா மருத்துவத்துறையில் ஆற்றியிருக்கும் மகத்தான சாதனைகளை நாம் அறிவோம். சீனாவின் கள சூழல் வேறுபட்ட ஒன்று. கொரோனா நோய் எதிர்ப்பில் அவர்களுடைய போராட்டத்தைக் குறித்து பார்ப்போம்.

சீனாவில் பொது சுகாதாரம் :

1949 இல் மாவோவின் தலைமையில் மக்கள்சீன புரட்சி அரசாங்கம் அமைந்தது. 1950 நடைபெற்ற தேசிய சுகாதார மாநாட்டில் உருவாக்கப்பட்ட வழிகாட்டுதல்கள் இப்போதும் கவனிக்கத் தக்கவை.

1) விவசாயிகள், தொழிலாளர்களாகிய வெகுமக்கள் நலனுக்கு பணியாற்றுவதே சுகாதாரப் பணியாளர்களின் முதன்மையான கடமை. 2) நோய்களை முன் தடுப்பதுதான் முதன்மை இலக்கு. 3) நவீன மருத்துவத்தையும் பாரம்பரிய மருத்துவத்தையும் சமமாக வளர்த்தெடுக்க வேண்டும். 4) மருத்துவ பணியாளர்களுடைய செயலூக்கம் மிக்க பங்களிப்புடன் மக்களுக்கு விழிப்புணர்வை கொண்டு சேர்ப்பது முக்கியமானது.

இப்போது சீனாவின் மக்கள் தொகை 140கோடியாக உள்ளது. உலகின் இரண்டாவது மிகப்பெரிய பொருளாதாரமாக வளர்ந்துள்ளது. ஆனாலும் சீனா ஒரு வளரும் நாடுதான். எனவே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும், ஊரகங்கள் மற்றும் நகரங்களுக்கான இடைவெளியும் அதிகமாக உள்ளன. சீனா தனது மொத்த உள்நாட்டு உற்பத்தியில் 5 சதவீதத்தை பொது சுகாதாரத்திற்காக செலவிடுகிறது. ஆயிரம் பேருக்கு 2 மருத்துவர்கள் உள்ளார்கள். 2.7 செவிலியர்கள் உள்ளனர். 4.34 படுக்கைகள் உள்ளன. இதிலிருந்தே சீனாவின் கட்டமைப்பு இன்னும் மேம்பட வேண்டியிருப்பதை அறிய முடியும்.

சமீபத்தில் புதிய சகாப்தத்தில் சீன சமூகத்தில் வெளிப்படும் முரண்பாடுகளை கம்யூனிஸ்ட் கட்சி ஆய்வு செய்தது. முக்கிய முரண்பாட்டை அடையாளமும் கண்டது. சீன மக்களிடையே பொருளாயத தேவைகள் அதிகரித்துள்ளன, உணவு, உறைவிடம் என்பதோடு கூடுதலான புதிய தேவைகள் உருவாகியுள்ளன, நலவாழ்வுக்கான விருப்பம் அதிகரித்துள்ளது. பண்பாட்டு வாழ்க்கையில் புதிய தேவைகள் உருவாகியுள்ளன. இவையெல்லாம் சமனற்ற, போதாக்குறையான வளர்ச்சியோடு முரண்படுகின்றன என்பது கம்யூனிஸ்ட் கட்சியின் கணிப்பாகும். இதனை மனதில்கொண்டுதான் சீன கம்யூனிஸ்ட் கட்சி செயல்படுகிறது.

கொரோனா எதிர்ப்பு மக்கள் யுத்தம்:

சீனாவின் ஊகான் நகரத்தில் நோய்த்தொற்று கண்டறியப்பட்ட ஒரு சில வாரங்களிலேயே பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு நோய் பரவியிருந்தது. அந்த நகரத்தில் மருத்துவமனை, மருத்துவர் மற்றும் மருந்து பொருட்களுக்கும் பற்றாக்குறை ஏற்பட்டது. இதே வேகத்தில் நோய் பரவினால் பொது சுகாதார கட்டமைப்பே பெரும் சுமைக்கு ஆளாகி, சமூக நெருக்கடியாகிவிடும்.

ஜனவரி 7 ஆம் தேதி சீன கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமை நிலைக்குழு கூடியது. நோய்த்தொற்று நிலைமைகளை அது ஆய்வு செய்தது. உடனடியாகவும், அதிவிரைவாகவும் செயல்படுவதுதான் அவர்களுக்கு இருந்த ஒரே வாய்ப்பு. அப்போதிருந்தே சீன கம்யூனிஸ்ட் கட்சி இதனை ஒரு மக்கள் யுத்தமாக வழிநடத்தியது.

“புரட்சிகர யுத்தம் என்பது மக்கள் நடத்துகின்ற ஒன்றாகும். மக்கள் சக்தியை திரட்டுவதன் மூலம் மட்டுமே நாம் அந்த போரினை நடத்த முடியும், மக்களை சார்ந்திருப்பதன் மூலமே அந்த போரை முன்னெடுக்க முடியும்” என்கிறார் தோழர் மாவோ. இந்த போராட்டம் நீண்ட ஒன்று, உத்திகளை மாற்றியமைத்து, உள்ளூர் நிலைமைகளை சரியாக கணக்கிட்டு மெல்ல மெல்ல முன்னேற வேண்டும். சீனாவில் வெற்றிபெற்ற சோசலிச புரட்சி அந்த கருத்தாக்கத்தின் நல்ல உதாரணமாகும்.

மக்கள் யுத்த கருத்தாக்கத்தை தொடர்ந்து முன்னெடுக்க வேண்டும் என்பதுதான் ஜி ஜின்பிங் வலியுறுத்திவந்த கருத்து. கொரோனா எதிர்ப்பு போராட்டத்தில் அந்த கருத்தாக்கம் பயன்பட்டது. மக்கள் நலவாழ்வே முதன்மையானது என்ற இலக்கு நிர்ணயிக்கப்பட்டது. நாட்டின் அனைத்து வளங்களும் இந்த போராட்டத்திற்காக திருப்பிவிடப்பட்டன. சீன குடியரசுத்தலைவர் ஜி ஜின்பிங், ஒவ்வொரு கட்டத்திலும் இப்போராட்டத்தை வழிநடத்தினார். சீன பிரதமர் லி கெகியாங் கொரோனா எதிர்ப்பு குழுவிற்கு தலைமையேற்று ஒருங்கிணைத்தார்.

இந்த ’யுத்தம்’ இரண்டு முனைகளில் முன்னெடுக்கப்பட்டது. முதலாவது மருத்துவமனைகள். அங்கு வரும் நோயாளிகளின் உயிரை காப்பாற்றுவது முக்கியம். இரண்டாவது நோய் பரவல் தடுப்பு நோயால் பாதிக்கப்பட்டோரை கண்டறிந்து தனிமைப்படுத்துதல். அதற்கு தேவையான வழிமுறைகளை வகுத்து விரைவாக செயல்படுவது.

ஜனவரி 23 ஆம் தேதி ஊகான் நகரமும் ஹூபே மாகாணமும் உலகம் கண்டிராத மிகப்பெரும் ஊரடங்கினை தொடங்கியிருந்தன. நாட்டின் அனைத்து மாகாணங்களில் இருந்தும் மருத்துவர்கள், நவீன உபகரணங்கள் மற்றும் இதர வளங்களை திரட்டி அங்கே அனுப்பினார்கள். 330 மருத்துவக் குழுக்களும் 41600 மருத்துவ பணியாளர்களும் ஊகானில் குவிக்கப்பட்டார்கள்.

தொற்றுநோய் தடுப்பு சிறப்புக் குழுவினர் 1800 பேர் ஊகானிற்கு அனுப்பப்பட்டார்கள். ஐந்தைந்து பேர் ஒரு குழுவாக இணைந்து ஒவ்வொரு வீட்டிலும் நேரில் சென்று ஆய்வு செய்தார்கள்.

முதலில் ஊகானிலும் அதை தொடர்ந்து சீனா முழுவதும் பின்பற்றப்பட்ட சில நடவடிக்கைகள் இங்கே குறிப்பிடத்தக்கன. தொற்றாளர்களின் தொடர்புகளை தடமறிய பழைய முறைகளுடன் சேர்த்து டிஜிட்டல் முறைகளும் பின்பற்றப்பட்டன. தொற்றாளர்கள் பயணித்த இடங்களுக்கு மற்றவர்கள் செல்லாமல் தவிர்க்கும் வகையில் எச்சரிக்கை பகிரப்பட்டது. 3 வார காலத்தில் 14 கோடி முறை இதற்காக இணையதள வசதி பயன்படுத்தப்பட்டதாகவும், அக்காலகட்டத்தில் 80 ஆயிரம் பேர் மட்டுமே பயணங்களை மேற்கொண்டதாகவும் அந்த நாட்டின் விபரங்கள் தெரிவிக்கின்றன. ஜெஜியாங் போல சில பகுதிகளில் சாலையில் சிக்னல் வைப்பது போல உடல்நிலையை பரிசீலித்து அடையாளம் காட்டும் சிக்னல்கள் அமைக்கப்பட்டன. சீனாதான் உலகிலேயே மிக அதிகமான இணைய பயன்பாட்டாளர்களை கொண்ட நாடு. அதன் காரணமாக அரசின் சுகாதார கண்காணிப்பு வசதிகளை இணையம் வழியாக சுமார் 90 கோடிப்பேர் பயன்படுத்த முடிந்துள்ளது.

மருத்துவக் கழிவுகளை கையாள்வதற்காக 13 மாகாணங்களில் இருந்து 140 சிறப்பு நிபுணர்கள் வந்தனர். ஒரு நாளைக்கு 1220 டன்கள் மருத்துவக் கழிவுகளை பாதுகாப்பாக கையாளும் வகையில் தகுதி படிப்படியாக உயர்த்தப்பட்டது.

ஷாங்காய் நகரத்திலிருந்து ஊகானுக்கு சென்று செவிலியர் பயிற்சிக்காக தன்னை இணைத்துக்கொண்ட செவிலியர் ஹு நானா தனது கடிதத்தில் இவ்வாறு எழுதியிருந்தார். “எல்லோரும் நலமாக இருந்தால் மட்டுமே எங்களின் சிறு குடும்பமும் பாதுகாப்பாக இருக்க முடியும். பல குடும்பங்கள் தங்கள் குடும்பத்தோடு வாழவேண்டும் என்பதற்காக நான் எனது வீட்டை விட்டு வெளியே செல்லும் முடிவை எடுத்தேன். என்னுடைய தேசம் நடத்துகிற போராட்டத்தில் என்னுடைய பங்களிப்பு அவசியம். முன்னேறிய மருத்துவ தொழில்நுட்பங்கள் எங்களிடம் இருக்கின்றன. எனவே எனக்கு ஏதும் அச்சமில்லை. நான் கற்றுக்கொண்ட அனைத்தையும் என் திறமைகளையும் கொண்டு இந்த போராட்டத்திற்கு உதவி செய்வதென முடிவு செய்தேன்.

முதல் கட்ட போராட்டம் அடுத்தடுத்த நிலைகளை எட்டியது. ஜி ஜின்பிங் இவ்வாறு விவரிக்கிறார் “தொற்றுநோய் நாடுமுழுவதும் பரவுதலை கட்டுப்படுத்த ஒருமாதம் எடுத்தது, தினசரி கண்டறியப்படும் உள்நாட்டு தொற்று எண்ணிக்கை இரண்டாவது மாதத்தில்தான் ஒற்றை இலக்கத்தை எட்டியது. ஊகான் நகரம் அமைந்துள்ள ஹுபெ மாகாணத்தில் போராட்டம் குறிப்பிடத்தக்க வெற்றியை சாதிக்க மூன்றாவது மாதம் ஆகியது”

ஏப்ரல் 26 ஆம் தேதி ஊகானில் மருத்துவமனையில் சிகிச்சை பெறும் தொற்றாளர்களின் எண்ணிக்கை பூஜ்ஜியம் ஆகியது. ஹூபே மாகாணத்தில் சிகிச்சை பெற்று நலமடைந்தவர்களில் 10 ஆயிரத்திற்கும் அதிகமானவர்கள் தீவிர சிகிச்சை பெற்று குணமடைந்தார்கள் என்பதையும், இதில் 3 ஆயிரத்து 600 பேர் 80 வயதுக்கும் அதிகமான முதியவர்கள் ஆவார்கள் என்பதையும் கவனிக்க வேண்டும். இந்த போராட்டத்தில் வேதனை தரும் வகையில் மருத்துவப் பணியாளர்கள் 46 பேர் நோய் தொற்றுக்கு ஆளாகி உயிரிழந்தார்கள். முதல் முனையில் போராட்டத்தின் தீவிரம் குறைந்துள்ளது. இரண்டாவது முனை எப்போதும் விழிப்போடு இருக்கவேண்டியுள்ளது.

இந்தப் போராட்டம் முடிந்துவிடவில்லை என்பதை சீனா அறிந்தே வைத்திருக்கிறது. மேலும் தடுப்பு மருந்துகள் மற்றும் சிகிச்சை வழிமுறைகளில் ஆராய்ச்சிகள் தொடர்கின்றன.

நோயுடன் ஒரு சதுரங்கம்:

தொற்றுநோய் தடுப்பு போராட்டத்தை விவரிக்கும்போது அதனை ஒரு சதுரங்க விளையாட்டாக ஒப்பிட்டார் ஜி ஜின்பிங். சீன தேசமே அந்த சதுரங்கத்தை ஆடியது. மருத்துவப் பணியாளர்களும், அறிவியல் அறிஞர்களும் ஒரு அணியாக நின்றார்கள் எனில், அந்த நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சியும், சோசலிச அரசாங்கமும், அரசு நிறுவனங்களும் பின்பலமாக நின்றார்கள். 90களுக்கு பிறகு பிறந்த இளைஞர்களின் பங்களிப்பு இதில் குறிப்பிடத்தக்கதாக அமைந்தது.

அனைவருக்கும் இலவச சிகிச்சை:

ஊகான் நகரத்தில் ஊரடங்கு அறிவிப்பதற்கு ஒரு நாள் முன்பாகவே, பணம் இல்லாத காரணத்தால் குடிமக்களின் ஒருவருக்கும் கூட கொரோனா பரிசோதனையோ அல்லது சிகிச்சையோ மறுக்கப்படக் கூடாது என்பதை அரசு தெளிவுபடுத்தியது.

சீன மருத்துவ காப்பீட்டு ஆணையத்தின் கணக்கீட்டின் படி கொரோனா தொற்று கண்டறியப்பட்ட உள்நோயாளிகளுக்கான செலவு தலா 2லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் ஆகும். தீவிர சிகிச்சை தேவைப்பட்டவர்களுக்கான செலவு 15 லட்சத்தை தாண்டியது. 70 வயதாகிய கொரோனா நோயாளி ஒருவருக்கு 3 மாதங்கள் சிகிச்சை தொடர்ந்து தரப்பட்டது, அவருக்கு எக்மோ கருவி இரு முறை பயன்படுத்தப்பட்டது. இதன் காரணமாக அவரை

குணப்படுத்துவதற்கான செலவு சுமார் 1 கோடியே 40 லட்சமாக ஆகியது.

இந்த செலவுகளில் ஒரு பகுதி இன்சூரன்ஸ் மூலமாகவும், பெரும்பகுதி அரசு நிதியாகவும் ஈடுசெய்யப்பட்டுள்ளது. மேலும் இக்காலத்தில் செயல்பட்ட அத்தியாவசிய நிறுவனங்களில் பணியாளர்களுடைய பாதுகாப்பை அரசே உறுதி செய்தது. தனியார் நிறுவனங்களில் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்வதற்கான நிதி உதவியை அரசு மேற்கொண்டது.

அதி விரைவான அறிவியல் ஆய்வுகள்:

தொற்று நோய் தடுப்புக்காக அமைக்கப்பட்ட்ட குழுக்களின் அதி முக்கியத்துவம் வாய்ந்தது பல துறை அறிவியல் அறிஞர்கள் மற்றும் தொழில்நுட்ப வல்லுனர்களைக் கொண்ட குழுவாகும். உலகம் பல தொற்றுநோய்களை எதிர்கொண்டிருக்கிறது காலரா, பிளேக், சின்னம்மை மற்றும் தொழுநோய் ஆகியவை பரவுவதை அறிந்துகொள்ளவும், தடுப்பதற்கும் நீண்டகால ஆராய்ச்சிகள் தேவைப்பட்டன. சமீபத்தில் நாம் எதிர்கொண்ட பெருந்தொற்றாகிய ஹெச் 1 என் 1 வைரசை அறிவதற்கு ஒருமாத கால ஆய்வு தேவைப்பட்டது. கொரோனா வைரசின் ஜீன் சீக்குவன்ஸ் ஒரு வார காலத்தில் தனிமைப்படுத்தப்பட்டதும், அது உலக நாடுகளோடு பகிரப்பட்டதும் மருத்துவத் துறைக்கு பெரும் உதவியாக அமைந்தது.

வைரசின் பாதிப்புகள் அது பரவும் விதம் குறித்து அறிந்து தொற்றுநோய் தடுப்பு உத்திகள் வகுக்கப்பட்டன. சிகிச்சை முறை உருவாக்கப்பட்டது. பலன் கொடுக்கும் மருந்துகள் உலகின் பல நாடுகளில் இருந்தும் பெறப்பட்டன. 16 நாட்களில் டெஸ்டிங் கிட்டுகள் உருவாக்கப்பட்டது, அவைகளை போதுமான எண்ணிக்கையில் தயாரித்து அனுப்பும் பணி தொடங்கியது.

அறிவியல் நிபுணர்களுக்கு வேறு ஒரு வேலையும் இருந்தது. அவர்கள் சீன மக்களிடையே தொலைக்காட்சிகளில் உரையாற்றினார்கள். தொலைபேசி வழி கேள்விகளுக்கு பதில் சொன்னார்கள். இவ்வாறு வதந்திகளுக்கு எதிரான அறிவியல் பிரச்சாரமும் முக்கிய பங்கு வகித்தது.

அரசு நிறுவனங்களின் பங்களிப்பு:

சீனாவின் தனியார் தொழில்நுட்ப நிறுவனங்கள் கொரோனா எதிர்ப்பு போராட்டத்தில் செய்த பங்களிப்பு அப்போதே பல செய்திகளில் வெளிவந்தது. அலிபாபா, டென்செண்ட், பைடூ, சென்ஸ் டைம் ஆகிய நிறுவனங்கள் செயற்கை நுண்ணறிவு தொழில்நுட்பங்களை வழங்கின. இணையதள

நேரலை சேவைகளின் மூலம் பள்ளி வகுப்புகள் தொடரப்பட்டன. மருத்துவ ஆலோசனை வழங்கப்பட்டது. தொற்றாளர்கள் மற்றும் நோய் பாதிப்பு அதிகம் உள்ள பகுதிகளில் உணவு விநியோகத்திற்காக ரோபோட்டுகளை பயன்படுத்தினார்கள். ஆனால் அரசு நிறுவனங்களுடைய மாபெரும் பங்களிப்பு இல்லாமல் கொரோனா போராட்டத்தை அவர்கள் நடத்தியிருக்க முடியாது.

சீன அரசு நிறுவனங்களின் பங்களிப்பு குறித்து கூடுதலாக குறிப்பிட வேண்டும். சாளரம் அமைப்பதற்கு 10 நொடிகள், சுவர் எழுப்ப 2நிமிடங்கள் என அதிவேகமாக, இரவும் பகலும் உழைத்து மருத்துவமனைகளை கட்டியது சீன அரசுக்கு சொந்தமான கட்டுமான நிறுவனங்களே ஆகும். 4000 ஆயிரம் கட்டுமான தொழிலாளர்கள் இரவு பகலாக உழைத்தார்கள். இந்த கட்டுமான பணிகளுக்கு தேவையான மின்சாரம், எரிசக்தி மற்றும் தகவல் தொடர்பினை அரசு நிறுவனங்களே வழங்கின.

மருத்துவ உபகரண உற்பத்தியை அரசு நிறுவனங்களின் விரைவான உதவியின் காரணமாகவே உடனடியாக அதிகரிக்க முடிந்தது.தொற்றுநோய் தடுப்பு உபகரணங்களான கவச உடைகள் முதல் அனைத்து உபகரணங்களின் உற்பத்தியும் விரைவாக அதிகரிக்கப்பட்டது. எரிசக்தி, தானிய உற்பத்தி,எண்ணெய்,உணவுப்பொருட்கள் மற்றும் மருந்து உற்பத்தியில் அரசு நிறுவனங்கள் பெரும் பங்களிப்பை செய்தன. சந்தையில் அத்தியாவசிய பொருட்களின் விலை கட்டுக்குள் வைக்கப்பட்டது. விலையை உயர்த்தி விற்ற வணிகர்கள் மீது குற்றவழக்கு பதியப்பட்டது, செயற்கை விலையேற்றம் கட்டுப்படுத்தப்பட்டது.

சீன அரசின் எண்ணெய் மற்றும் உணவுப்பொருள் கழகம், சீன தானிய சேமிப்புக் குழுமம், சீன உப்பு தொழிற்சாலை அனைத்தும் தங்கள் வழங்கலை அதிகப்படுத்தின. சீனாவின் வழங்கல் மற்றும் சந்தைப்படுத்துதல் கூட்டுறவு நிறுவனங்கள் முயற்சியெடுத்து விவசாய கூட்டுறவு சங்கங்களை நேரடியாக தொடர்புகொண்டு காய் கனிகள் மற்றும் தேவையான பொருட்கள் சரியான விலையில் தடையில்லாமல் கிடைப்பதை உறுதி செய்தன.

மருத்துவ உபகரணங்கள் தயாரிப்பு, அதிலும் குறிப்பாக மருத்துவர்களுக்கான பாதுகாப்பு கவச கருவிகள் தயாரிக்கும் பணி புயல் வேகத்தில் முடுக்கிவிடப்பட்டது. ஜனவரி 28 ஆம் தேதி அன்று சீனாவின் ஒரு நாளில் 10 ஆயிரம் சோடி கருவிகளை தயாரிக்க முடிந்தது. பிப்ரவரி 24 ஆம் தேதி அவர்களின் தயாரிப்பு வேகம் ஒரு நாளைக்கு 2 லட்சத்தை

தாண்டியது. பிப்ரவரி 1ஆம் தேதி என்ற அளவில்  7 லட்சத்து 73 ஆயிரம் பரிசோதனைக் கருவிகளை சீன அரசு தயாரித்தது பிப்ரவரி 25 ஆம் தேதியன்று ஒரு நாளில் 17 லட்சம் என்ற அளவில் அதன் எண்ணிக்கை உயர்ந்தது. மார்ச் 31 ஆம் தேதி இந்த எண்ணிக்கை 42 லட்சமாகியது. தொழிற்சாலை நிர்வாகங்களை மருத்துவ உபகரண தயாரிப்பை நோக்கி உந்தித் தள்ளியது அரசு நிர்வாகம். ஆம்புலன்சு வாகனங்கள், வெண்டிலேட்டர்கள், இ.சி.ஜி இயந்திரங்கள், கிருமி நாசினி இயந்திரங்கள் உள்ளிட்டு தேவையான அனைத்து கருவிகளும் உள்நாட்டிலேயே அதிக எண்ணிக்கையில் உற்பத்தி செய்யும் வகையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

**முன்னணிப்படையாக கம்யூனிஸ்டுகள் :**

மார்க்சியவாதிகள் என்போர் ஆரூடம் சொல்பவர்கள் அல்ல. எதிர்கால வளர்ச்சிப் போக்குகளையும் மாற்றங்களையும் மனதில் கொண்ட பொதுவான வழிகாட்டுதல்கலையே அவர்களால் உருவாக்க முடியும், இயந்திர கதியாக ஒரு காலத்தை நிர்ணயிக்க முடியாது என்றார் மாவோ. சீனாவின் 46 லட்சம் கட்சி கிளைகளும் இப்போராட்டத்தில் ஈடுபட்டார்கள். போராட்டத்தின் ஒவ்வொரு கட்டத்தையும் இயக்கவியல் பார்வையோடு வழிநடத்தினார்கள்.

மக்களிடமிருந்து மக்களுக்கு என்ற மாஸ்லைனை நீண்டகாலமாக கடைப்பிடிக்கும் அனுபவம் கொண்டது சீன கம்யூனிஸ்ட் கட்சி.  கட்சியின் அனைத்து நிலைகளிலும் உள்ள கமிட்டிகள் உடனடியாக ஒரு அவசர நிலையை எதிர்கொள்ள தயாரானார்கள். தங்களிடமுள்ள அனைத்து வளங்களையும் திரட்டினார்கள்.  மக்களுக்கு தலைமையேற்க வேண்டும், மக்களிடம் இருந்து ஆலோசனைகளை பெற்று செயல்பாடுகளை பட்டை தீட்ட வேண்டும்.

யாரும் செய்வதற்கு தயங்கும் ஒரு பணியாக இருந்தால் அதில் கம்யூனிஸ்டுகளே முதல் ஆளாக ஈடுபட வேண்டும். தயக்கம் என்பது ஒருபோதும் கூடாது என்றது  கட்சி.

1) முன் கை எடு, 2) அறிவியல் அடிப்படையில் நோயின் தன்மையை அறிந்துகொண்டு  செயல்படு 3)  திட்டமிடுதலை மிகுந்த கவனத்துடன் மேற்கொள்க, ஒட்டுமொத்த திட்டத்தின் பகுதியாகவும், உள்ளூர் நிலைமைகளை மனதில் கொண்டும் திட்டம் இருக்க வேண்டும், 4) திட்டமிட்ட பணிகளை அமைப்பின் வலிமையைக் கொண்டு செயலாக்குக.

நடைமுறை அனுபவங்களை உள்வாங்கி செயல்பாட்டினை கூர்மைப்படுத்துக என வழிகாட்டியது.

ஜி ஜின்பிங், “பொத்தாம் பொதுவான உத்தரவுகளைக் கொண்டோ, அதிகாரத்துவத்தைக் கொண்டோ அல்லது பெயருக்கு வேலை செய்வதாலோஇந்த சவாலை எதிர்கொள்ள முடியாது.” என தெளிவாகவே குறிப்பிட்டார். உத்தரவுகளை கேட்டு வேலை செய்யும் பணியாளராக அல்ல, உள்ளூர் நிலைமைகளுக்கு ஏற்ப உத்திகளை வகுத்து செயல்படும் தளபதியாக செயல்பட்டார்கள் முரண்பாடுகளை ஆய்வு செய்து முறையாக கையாண்டார்கள்.

மருத்துவர், செவிலியர் என மருத்துவ சிகிச்சை முனையில் பணியாற்றிய குழுக்களில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் முன் நின்றார்கள். உதாரணமாக ஹூபே மாகாணத்திற்கு வந்த சீன ராணுவ மருத்துவக் குழுவினர் 450 பேரிலும் 60 சதவீதம் கட்சி உறுப்பினர்கள் ஆவார்கள்.

பீக்கிங் பல்கலைகழகத்திலிருந்து மட்டும் ஊகானுக்கு 405 மருத்துவ பணியாளர்கள் வந்திருந்தனர். அதில் 171 பேர் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள். “ஒவ்வொரு பத்து நிமிடத்திலும் 5 நோயாளிகளை பரிசோதிக்க வேண்டியிருந்தது. ” வாங் பென் என்ற மருத்துவர் இவ்வாறு குறிப்பிட்டார் “ஊகானில் ஒவ்வொரு நாளும் மக்கள் எங்களை அன்பில் நனைத்தார்கள், கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்ததற்கான பொருளை இந்த போராட்டம் எங்களுக்கு உணர்த்தியது”

ஹெய்லாங்ஜியாங் உள்ளிட்ட சில இடங்களில் கட்சியினரும், அரசு அதிகாரிகளும் தளர்வோடு நடந்துகொண்டார்கள். உடனடியாக தவறு செய்தவர்கள் மீது நடவடிக்கை மேற்கொண்டு கட்டுப்பாட்டை கூடுதலாக்கினார்கள். மேலும் களத்தில் ஒவ்வொரு வீடாக சென்று உதவி செய்த கட்சி தோழர்களின் பணியை ஒழுக்க ஆய்வு மற்றும் மேற்பார்வை குழு கண்காணித்தது. இந்தக் குழுவுக்கென தனியாக ஒரு பத்திரிக்கை இயங்குகிறது நோய் தடுப்புக் குழுக்களின் அர்ப்பணிப்பு மிக்க பணிகள் ஏராளமாக பதிவு செய்யப்பட்டுள்ளன.

**சமுதாய குழுக்களின் பங்களிப்பு:**

மாகாண அரசுகளும், உள்ளாட்சிகளும் அவரவர் சூழல் குறித்து ஆய்வு செய்து படைப்பாக்கத்துடன் செயல்பட்டார்கள். மக்களுடன் நேரடி தொடர்பை உறுதி செய்யும் 6 லட்சத்து 50 ஆயிரம் சமுதாய குழுக்கள் சீனா முழுவதும் உள்ளன. இவையே சீன அதிகாரப்பரவல் கட்டமைப்பின் கடைசி கண்ணிகள்.

நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள இந்தக் குழுக்களின் 40 லட்சத்திற்கும் அதிகமான உறுப்பினர்கள் உள்ளனர். அவர்கள் கொரோனா விழிப்புணர்வு பணிகளில் ஈடுபட்டார்கள். ஒவ்வொரு சமுதாய குழு உறுப்பினரும் 350 பேரை நேரில் சந்திக்க வேண்டியிருந்தது. ஊரடங்கு தீவிரமாக அமலாக்கப்பட்ட ஹூபே மாகாணத்தில் 1 லட்சத்து 70 ஆயிரம் பேர் உணவுப்பொருள் மற்றும் மருந்து விநியோகத்தில் பணியாற்றினார்கள். அதாவது ஊரடங்கு காலத்தில் மக்கள் நடமாட்டத்தை குறைப்பதற்கான பணியில் இவர்களின் உழைப்பு மிகப்பெரும் பங்கு வகித்தது.

கரடுமுரடான சாலைகளில், பாதுகாப்பில்லாத பகுதிகளில் பயணித்து ஒவ்வொரு குடிமகனையும் அவர்கள் சந்தித்தார்கள். குடிமக்கள் நல அமைச்சகத்தின் தகவலின்படி இந்த பணியாளர்களில் 53 பேர் பணியின்போது மரணமடைந்துள்ளனர். இவ்வாறு மரணமடைந்தவர்களில் 92.5 சதவீதம் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் ஆவார்கள்.

சீனாவின் ஹெனான் மாகாணத்தில் போய் என்ற மாவட்டத்தில் நடந்தவைகளை சென் சென் என்பவர் பீப்பிள்ஸ் டெய்லி இதழில் எழுதியுள்ளார்.

மாகாணத்தின் திறன் வாய்ந்த தோழர்களை தேர்வு செய்து முன்னணிக்கு அனுப்பினார்கள். மொத்தம் 523 பேர். அவர்களின் பணி ஆளுக்கு ஒரு குழுவை வழிநடத்துவதாகும்.

இந்த குழுக்களின் கட்சி உறுப்பினர்கள் சிறப்பாக செயல்பட்டால் அவர்கள் சிவப்பு பட்டியலில் இடம்பெற்றார்கள். தொய்வாக இருந்தால் நீல பட்டியலில் இடம்பெற்றார்கள். போய் மாவட்டத்தில் 76 பேர் சிவப்பு பட்டியலிலும், 2 பேர் நீல பட்டியலிலும் இடம்பிடித்தார்கள். முன்னணியில் பணியாற்றும் குழுக்களுக்கு சரியான நேரத்தில் உணவு, குடிநீர் கொடுப்பது. ஆட்களை மாற்றிவிடுவது. முக கவசம், கை உறைகள் கிடைக்கச் செய்வது தனியாக ஒரு குழுவால் கவனிக்கப்பட்டது. இந்த பணியாளர்களுக்கு ஆன்லைன் வழி உளவியல் ஆலோசனைகளும் உறுதி செய்யப்பட்டன. இந்த போராட்டத்தின் வழியே ஏராளமான புதிய உறுப்பினர்கள் கட்சியை நோக்கி ஈர்க்கப்பட்டனர்.

**இளைஞர்களின் பெரும் பங்கேற்பு:**

கொரோனா நோய் தடுப்பு பணிகளின் இளைஞர்களை அதிக அளவில் ஈடுபடத் தூண்டியது சீன அரசும், கம்யூனிஸ்ட் கட்சியும். 1990 களுக்கு பின் பிறந்த இளைஞர்கள் அதிக எண்ணிக்கையில் பங்கேற்றார்கள். ஆண் செவிலியரான ஜியான் யாங், "நாங்கள் இளைஞர்கள், நாங்களே முன்

வரிசையில் நிற்போம்” என உற்சாகமாக குறிப்பிடுகிறார்.  இளைஞர்களின் பங்கு தனித்து குறிப்பிட வேண்டிய அளவில் தனிச்சிறப்பானதாக இருந்தது.

இப்போது சீன ஊடகங்களில் 90களுக்கு பின் பிறந்தோர் என்பதே அவர்களை குறிப்பிட பொதுவான பெயராகிப்போனது. ஊகானில் குவிக்கப்பட்ட மருத்துவப் படையணியில் 12 ஆயிரம் பேர் 90களுக்கு பின் பிறந்தவர்கள் ஆவர்.

ஒரு வேளை இந்த போராட்டத்தில் நான் மரணிக்க நேர்ந்தால் வைரஸ் குறித்த ஆராய்ச்சிக்காக என்னுடைய உடல் பயன்படும் என லி ஹு என்ற பெண் செவிலியர் தெரிவித்தார். அவர் 1995க்கு பின் பிறந்தவர்.

95 க்கு பின் பிறந்த காவல் அதிகாரியான யாங் குயுச்செங். தனது அனுபவத்தை பகிர்ந்திருக்கிறார். பல நோயாளிகளை மருத்துவமனைக்கு அழைத்து வரச் செல்லும்போது நாய்களை எதிர்கொள்வது சவாலாக இருந்தது. சில காவலர்கள் நாய் கடிக்கு ஆளானார்கள். நோயாளிகளுக்கு ஏற்படும் அச்சத்தை போக்குவதுடன் அவர்களுடன் நிதானமாக உரையாடியே மருத்துவமனைகளுக்கு அழைத்துவர வேண்டும் என்கிறார் அவர். இந்தப் போராட்டத்தின் போக்கில் அவர் கம்யூனிஸ்ட் கட்சியிலும் தன்னை இணைத்துக்கொண்டார்.

வாகனங்களை பரிசோதிக்கும் பணியில் ஈட்டுபட்ட்டவர் சோவ் போஜியான். “தியாஞ்சின் பகுதியை கடந்த ஒவ்வொரு ஓட்டுனரையும் பரிசோதித்தேன். அவருடைய உடல்நலனை விசாரித்து பதிவு செய்தேன். கைகள் குளிரில் உறைந்தன. எனினும் ஒருவரைக் கூட விசாரிக்காமல் விடவில்லை.” என்கிறார் அவர்.

கூட்டுறவு மற்றும் பகிர்மான அலுவலகத்தின் பணியாளரான லியூ போ, 40 நாட்கள் முன்னணி பணிகளை மேற்கொண்டார். தனிமைப்படுத்தப்பட்ட நபர்களுக்கு தேவையான உபகரணங்களை வாங்கி வழங்குவது அவருடைய பணி. 10 விதமான பொருட்களை தினமும்550 செட்டுகள் வாங்கி அவற்றை தனிமைப்படுத்தல் அறைகளில் வைக்க வேண்டும். 40 நாட்கள் இடைவெளியில்லாமல் செய்து முடித்துள்ளார் அந்த இளைஞர்.

இவ்வாறு கொரோனா நோய் தடுப்பில் குறிப்பிடத்தக்க வெற்றியை சீனா சாதித்திருக்கிறது. ஒருங்கிணைந்த விரைவான செயல்பாடுகளே

அவர்களை காத்துள்ளன.

கொரோனா நோய்த் தொற்றிலிருந்து சொந்த மக்களை பாதுகாப்பதில் அரசாங்கங்கள், பெரு நிறுவனங்கள், உள்ளூர் சமூகம் மற்றும் ஊடகங்களுடைய செயல்பாடுகளை பற்றிய ஆய்வினை சிங்கப்பூரின் இரண்டு முன்னணி ஆய்வு நிறுவனங்கள் நடத்தினார்கள். (Singapore's leading social research agency Blackbox Research and technology company Toluna) 23 நாடுகளிலிருந்து பொதுமக்கள் பங்கேற்ற இந்த ஆய்வில் முதல் இடத்தினை சீனமும், இரண்டாம் இடத்தை வியட்நாமும் பிடித்திருந்தன. ஏகாதிபத்திய நாடுகள் இந்த பட்டியலில் 50 புள்ளிகளைக் கூட பெற முடியாமல் பின் தங்கியிருக்கிறார்கள்.

**சில படிப்பினைகள்:**

அவசரகாலத்தில் முடிவுகளை உள்ளூர் அளவிலேயே மேற்கொள்வதற்கு உதவி செய்யும் வகையில் சட்ட திருத்தம் விவாதிக்கப்பட்டுவருகிறது. உயர்மட்ட நிர்வாகங்களின் முடிவுகளுக்காக காத்திருந்து அதனால் கால விரையமாதல் மற்றும் பல்வேறு துறைகளுக்கு இடையிலான தகவல் தொடர்பு மற்றும் நிர்வாக முடிவுகளை மேற்கொள்வதன் சிரமங்களை பரிசீலித்து இந்த முடிவுக்கு அவர்கள் வந்துள்ளார்கள்.

மேலும்பொது சுகாதாரம் மற்றும் காப்பீட்டுக்கான சட்டங்களின் செய்ய வேண்டிய திருத்தங்களை அவர்கள் விவாதிக்கிறார்கள், உயிரி பாதுகாப்பு என்பதை தேச பாதுகாப்பின் ஒரு பகுதியாக இணைக்க வேண்டும் என்ற முடிவுக்கும் வந்துள்ளார்கள். வன உயிரிகளை பாதுகாப்பது மற்றும் கழிவுகளை மேலாண்மை செய்யும் வழிமுறைகளை சீர்திருத்துவது மற்றும் நவீனப்படுத்துவது என்பதாக அவர்களின் அடுத்தகட்ட திட்டங்கள் அமைந்திருக்கின்றன.

கொரோனா வைரஸ் தடுப்பு மருந்து மற்றும் சிகிச்சை முறையை வளர்த்தெடுப்பதற்கான ஆய்வுகளும் முடுக்கிவிடப்பட்டுள்ளன. மீண்டும் தொற்று பரவல் எங்கிருந்து வேண்டுமானாலும் நடக்கலாம் என்பதால் தடுப்பு மருந்து கண்டுபிடிப்பு மட்டுமே இந்த போராட்டத்தில் முடிவான ஒரு திருப்பத்தை ஏற்படுத்தும்.

பொருளாதார தாக்கம் குறித்து:
பொது சுகாதாரத்திற்கும், உற்பத்திக்கும் இடையிலான இயக்கவியல்

உறவினை புரிந்துகொண்டவர்கள் மார்க்சியவாதிகள். உற்பத்தியில் தற்காலிக முடக்கம் இருக்கும் என்பதை அறிந்தே அவர்கள் செயல்பட்டார்கள். உலக முதலாளித்துவ நாடுகள் பலவற்றிலும் குறிப்பிடத்தக்க வெற்றியை சாதிக்கும் முன்பே பொருளாதார நடவடிக்கைகள் தொடங்கப்பட்டன. அது நோய் பரவலில் கேடான விளைவுகளை ஏற்படுத்தியது. சீனாவை பொருத்தமட்டில் தற்காலிக முடக்கத்தை சரியாக பயன்படுத்திக்கொண்டிருப்பது சோசலிச கட்டமைப்பால் கிடைத்த பெரும் நன்மை ஆகும்.

இருவகையான பொருளாதார திட்டங்கள் தேவைப்படுகின்றன. முதலாவது ஊரடங்கு காலத்தில் மக்களின் உயிர் காக்கவும், வருமான இழப்பை ஈடுகட்டவும் செய்யவேண்டிய உதவிகள். இரண்டாவது ஊரடங்கு முடிந்த பிறகாக தேவைப்படுகிற பொருளாதார நடவடிக்கைகள்.

ஊரடங்கு காலத்தில் வேலையில்லாக்கால நிவாரணம் கோரி விண்ணப்பிப்போருக்கு 6 மாதங்களுக்கு ஊதிய காப்பீடு மற்றும் கூடுதலாக விலைவாசி மானியம் சேர்த்து வழங்கப்பட்டுள்ளது. 13 லட்சம் நிறுவனங்கள் இக்காலத்தில் வேலையில்லாக்கால இன்சூரன்ஸ் தொகை பெற்றுள்ளன. அவற்றில் பணியாற்றும் 4கோடியே 20 லட்சம் தொழிலாளர்கள் உதவிபெற்றுள்ளார்கள்.

தற்காலிக உதவிக்காக விண்ணப்பிப்போருக்கு தற்காலிக உதவி அறிவிக்கப்பட்டது அவர்களுக்காக 24 மணி நேர தொலைபேசி அழைப்பு அறிவித்து அதன் மூலம் உதவியை கொண்டு சேர்த்தார்கள். குறைந்த வருமானம் கொண்ட குடும்பத்தாருக்கு பண உதவித்திட்டம் அறிவிக்கப்பட்டது.

இவ்வாறு நிதியமைச்சகத்தின் சமூக பாதுகாப்புத் துறையின் சார்பில் 15 ஆயிரத்து 600 கோடி யுவான்கள் (ரூபாயில் 1 லட்சத்து 66 ஆயிரம் கோடிகள்) ஒதுக்கப்பட்டதாக அந்த துறையின் துணை இயக்குனர் வாங் ஜிக்ஜியாங் தெரிவிக்கிறார். இது சீனாவின் மத்திய அரசு ஒதுக்கிய தொகையாகும். மாகாணங்களின் வளர்ச்சி நிலைக்கு ஏற்ப அவர்கள் பங்கும் சேர்த்து உதவிகள் தரப்பட்டுள்ளன. மேலும் உள்ளாட்சி நிர்வாகங்களும் மக்களுக்கு நேரடி நிதி உதவி செய்கிறார்கள். உதாரணமாக மே மாதத்தில் குவாங்டாங் மாகாணத்தில் பைஷலோங் என்ற கிராம கமிட்டி தனது கிராமத்தில் வசிக்கும் அனைவருக்கும் தலா ஆயிரம் யுவான்கள்

(குழந்தைகள், சிறுவர்கள் உட்பட) வழங்குவதாக அறிவித்தது. விவசாய வேலைகள் முடங்கியுள்ளதை அடுத்து அவர்கள் இந்த முடிவை எடுத்திருக்கிறார்கள்.

ஊரடங்கு முடிந்த பிறகு மக்கள் கடைவீதிகளுக்கு செல்வதற்காக சிறப்பு கூப்பன்களை உள்ளூர் நிர்வாகங்கள் அறிவித்து வருகின்றனர்.

நோய் தடுப்பு மற்றும் சிகிச்சைக்கான செலவு தவிர உபகரணங்கள் தயாரிக்கும் நிறுவனங்களுக்கு வரித் தள்ளுபடியும், மானியக் கடனும் தரப்பட்டது. சிறு, குறுந்தொழில்கள் மற்றும் கிராமப்புற நிறுவனங்களுக்கு நிவாரணம் அறிவிக்கப்பட்டது.

பொருளாதார மீட்சிக்கான நீண்டகால திட்டங்கள்:

2008 ஆம் ஆண்டு எதிர்கொண்ட உலக பொருளாதார நெருக்கடியை விடவும் பெரிய பாதிப்பை இப்போது எதிர்கொள்ள நேரிடலாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

இக்காலத்தில் (2020 ஜனவரி மற்றும் பிப்ரவரி) சீனாவின் தொழில்துறை உற்பத்தியானது 13.5 சதவீதமாக வீழ்ச்சியை சந்தித்துள்ளது. நகர்ப்புற வேலையின்மை விகிதம் 6.2 சதவீதமாக உயர்ந்துள்ளது. சென்ற ஆண்டோடு ஒப்பிடுகையில் இந்த ஆண்டின் முதல் இரண்டு மாதங்கள் சில்லறை வணிகம் 20.5 சதவீதம் குறைந்திருந்தது. இவையெல்லாம் கடுமையாக விளைவுகளே ஆகும்.

ஏப்ரல் மாத கடைசியில் சீனாவின் வேலையின்மை விகிதம் 20.5 % ஆக இருக்கலாம் என ஜோங்டான் செக்யூரிட்டீஸ் என்ற தரகு நிறுவனம் தெரிவிக்கிறது. அவர்கள் எதிர்பார்ப்பின்படி 7 கோடிப்பேர் வேலையில்லாமல் இருக்கலாம் என்கிறார்கள்.

வேலையின்மையை எதிர்கொள்வதை தனது அவசர அவசியமுள்ள நடவடிக்கையாக சீனா எடுத்துக்கொண்டுள்ளது. முக்கிய தொழில்துறைகளில் 10 ஆயிரம் நிறுவனங்கள் மற்றும் உள்ளூர் முக்கிய நிறுவனங்களில் 4 லட்சம் தொழிலாளர் பணியிடங்களுக்கான தேவை கண்டறியப்பட்டு தொழிலாளர்களை அமர்த்த முன்கை எடுத்திருக்கிறார்கள்.

முதலாளித்துவ நாடுகளின் திறனுள்ள தொழிலாளர்கள் பசியிலும்

வேதனையிலும் அச்சத்திலும் செய்வதறியாது திகைக்கிறார்கள். இது உற்பத்தியை மீட்டமைப்பதில் சிக்கலான விளைவுகளை ஏற்படுத்து.

சீன அரசானது இடம்பெயர்ந்து பணியாற்றும் தொழிலாளர்கள் தங்கள் பணியிடங்களுக்கு பாதுகாப்பாக திரும்புவது முக்கியம். அதற்காக 1 லட்சத்து 92 ஆயிரம் சிறப்பு வாகனங்கள், 367 சிறப்பு ரயில்கள், 1462 கார்கள் மற்றும் 551 விமானங்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இதன் மூலம் 5.03 மில்லியன் தொழிலாளர்களை அவர்கள் பணியிடங்களுக்கு நேரடியாக சேர்க்கவிருக்கிறது.

ஏற்றுமதி வர்த்தகத்தை பொருத்தமட்டில் சீனாவின் எதிர்காலம் உலக சூழலை பொருத்தே அமையும்.

மே மாத இறுதியில் சீனாவின் 'இரண்டு பேரவைகள்' கூடி விவாதிக்கவுள்ளன. கொரோனா நோய் பரவலின் காரணமாக ஒத்திவைக்கப்பட்ட அந்த நிகழ்வு எதிர்வரவுள்ள பொருளாதார சவால்களைக் குறித்து விவாதிக்கவிருக்கிறது. பொருளாதார முனையில் சீனாவின் போராட்டம் அதன் பிறகு தெளிவாகலாம்.

சீனாவின் பொருளாதார நடவடிக்கைகள் கீழ்க்கண்டவாறு இருக்கும் என சீனாவின் ஏடுகள் தெரிவிக்கின்றன.

1) மக்களுக்கு பணம் சென்று சேரும் வகையிலான ஊக்கத்திட்டம் அறிவிக்கப்படும். (வேலையில்லாக்கால நிவாரணத்தை உயர்த்துதல் உள்ளிட்டு)

2) கட்டமைப்பு திட்டங்களுக்கான ஊக்கத்தை கவனத்தில் கொண்ட நிதிச் செலவினங்கள் மேற்கொள்ளப்படும்.

3) சிறு குறுந்தொழில்களுக்கு சிறப்பு கடன்கள் வழங்கப்படும், அவர்களின் வரிகள் தள்ளுபடி செய்யப்படும்.

4) ஒவ்வொரு உள்ளூர் அரசு நிர்வாகமும் தங்கள் சூழலுக்கு ஏற்ற முடிவுகளை மேற்கொள்வதற்கான சுதந்திரம் உள்ளது. (இது பெரிய நிறுவனங்களுக்கு மட்டும் சலுகைகளை அள்ளிக் கொடுக்கும் முதலாளித்துவ அணுகுமுறைக்கு நேர்மாறானதாகும்)

5) உற்பத்தி பழைய நிலைமைக்கு திரும்பியவுடன் வழங்கல் தொடர்பும் சீராக்கப்படும்.

6) தனது சந்தையை உலகிற்கு திறப்பது மற்றும் உள்நாட்டு சந்தை சார்ந்த சீர்திருத்தங்களை தொடர்ந்து மேற்கொள்ளும்.

7) பொருளாதாரத் திட்டங்கள் அனைத்தின் முதன்மை நோக்கம் வேலைவாய்ப்பை மீட்டமைப்பதாகவும், ஏழை மக்களை பாதுகாப்பதாகவும் இருக்கும்.

முதலாளித்துவ ஊடகங்கள் இந்தியாவைப் போலவே சீனாவிலும் தொழிலாளர்கள் நலத்திட்டங்களை வெட்டுமாறு ஆலோசனைகள் வைக்காமல் இல்லை. முதலாளிகள் தொழிலாளர்களுக்கு தரும் சம்பளம் அல்லாது 30 சதவீத தொகையை நலத்திட்டங்களுக்கு செலுத்த வேண்டும். ஓய்வூதியம், மருத்துவக் காப்பீடு, வேலையில்லாக் கால காப்பீடு, பணிக்கால விபத்துக் காப்பீடு மற்றும் பேறுகால காப்பீட்டு தொகைகளை ரத்து செய்ய வேண்டும் என்பது முதலாளித்துவ அறிஞர்களின் எதிர்பார்ப்பாகும். பொருளாதார தளத்தில் எழக்கூடிய சவால்களை அந்த நாடு எப்படி எதிர்கொள்ளவுள்ளது என்பதை வரும் நாட்களில் பார்க்கலாம்.

இந்த நெருக்கடிகளை சமாளித்துக்கொண்டே வறுமை ஒழிப்பு இலக்கை நோக்கியும் சீனா நடைபோடத் தொடங்கியுள்ளது. உலகம் நிர்ணயித்திருக்கும் வறுமைக்கோட்டு அளவுகோலுக்கு கீழே ஒருவரும் வாழாத நாடாக சீனத்தை மாற்றியமைக்க வேண்டும் என்பது அந்த கட்சி வகுத்துக்கொண்ட மிக முக்கியமான இலக்கு. வைரசை எதிர்கொள்வதில் கிடைத்த வெற்றியைப் போலவே இதிலும் வெல்வோம் என்கிறார்கள்.

வறுமையும், நோயும் மனித குலத்தின் பொது எதிரி. இவைகளுக்கு எதிரான போராட்டத்தில் சோசலிசமே உற்ற துணையாகும் என்பதை சீனா எடுத்துக் காட்டட்டும்.

# சீனாவுக்கு எதிரான ஏகாதிபத்திய பொய்கள்

அபிநவ் சூர்யா

கொரோனா பெருந்தொற்றுக்கு எதிராக ஏகாதிபத்தியம் பெரும் தோல்வியை எதிர்கொண்டுள்ளது. உடனே ஏகாதிபத்திய நாடுகளும், முதலாளித்துவ சிந்தனையாளர்களும் தங்கள் தோல்வியிலிருந்து திசை திருப்ப சீனாவின் மேல் அவதூறுகளை அள்ளி வீசுகிறார்கள். இயல்பாகவே வலதுசாரி சக்திகள் அறிவியல் ஆக்கத்திற்கு எதிரானவர்கள். எனவே, சீனாவிடமிருந்து

பாடம் கற்க கோரும் அறிவியல் சமூகத்தின் கருத்துக்களை நிராகரிக்கின்றனர்.
உலக நாடுகளின் "தலைவர்கள்" என்று கூறிக்கொள்ளும் நாடுகள் மக்கள் எத்தனை பேர் இறந்தாலும் தங்களின் மக்கள் விரோத அரசியல் மூலம் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ள முனைகிறார்கள். இது போன்ற உக்திகளுக்கு தலைமை வகிக்கும் அமெரிக்காவும் பிரிட்டனும், தங்களின் ஏகாதிபத்திய போர்கள், காலனியாக்கங்கள், பொருளாதார கொள்கைகள் மூலம் உலகையே சூறையாடியதை தாக்கள் வரலாற்றை வசதியாக மறந்துவிடுகின்றனர். சரியாக செயல்பட்டுவரும் சீனாவிடமிருந்து நட்ட ஈடு கோரும் சிறுமையை செய்யவும் தயங்கவில்லை.
இது போன்ற ஏகாதிபத்திய சக்திகளின் அவதூறுகள் தொடர்ந்து கொண்டு தான் இருக்கும். ஆனால் அதற்காக இல்லாமல், ஏகாதிபத்தியத்தை எதிர்த்து மக்கள் அரசு நடத்தி வரும் சீனா, இந்த நெருக்கடியில் எடுத்த நடவடிக்கைகள் குறித்து அறிந்து கொள்வது முற்போக்காளர்களுக்கு மிகவும் அவசியம்.
கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக நவீன தாராளமயக் கொள்கைகளை உலக நாடுகள் மீது புகுத்தி, மக்களின் நல்வாழ்வு மீதான அரசுகளின் பொறுப்பை முற்றிலுமாக ஒழித்து விட்ட ஏகாதிபத்திய தாக்குதலின் மத்தியிலே, ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, மக்கள் நலனில் அரசு முக்கிய பங்காற்றுவதன் மூலம் அசாதாரண பொருளாதார வளர்ச்சியை ஈட்ட முடியும் என்று நிறுவியது சீனாவாகும்.
கொரோனா பெருந்தொற்றை எதிர்கொள்வதில் தொடக்கத்திலிருந்து சீனா என்ன நடவடிக்கைகள் எடுத்தது என்று அறிவது நமக்கு அறிவியல் ஞானம் மட்டுமன்றி, மக்கள் நலத் திட்டங்கள் குறித்த முக்கிய பாடங்களையும்
டிசம்பர் மாத பிற்பகுதியில் தான் ஊகான் நகர சுகாதார அமைப்பு நூதனமான, நிமோனியா போன்ற தொற்று பரவி வருவதை கண்டறிந்தது. இந்த நேரத்திலிருந்து, சீனா இந்நோயை கட்டுக்குள் கொண்டு வர எடுத்த நடவடிக்கைகள் அனைத்துமே துரிதமாகவும், வெளிப்படையாகவும் இருந்தது.
டிசம்பர் 27 அன்று, டாக்டர் ஜாங் ஜிக்சியாங் என்பவர் தான் இந்த நிமோனியா போன்ற நோய் தொற்று ஒரு ஆபத்தான வைரஸ் மூலம் பரவி வருவதாக முதலில் சீன மருத்துவர்கள் மற்றும் சுகாதார நிபுணர்களிடம் தெரிவித்தார். அன்றிலிருந்து சீனாவின் மொத்த சுகாதார கட்டமைப்பும் துரிதமாக செயல்பட துவங்கிவிட்டன.
டிசம்பர் 30ம் தேதி அன்று, ஊகான் நகர சுகாதார ஆணையம் அனைத்து மருத்துவமனைகளுக்கும் இந்த நூதன நிமோனியா நோய்க்கு சிறப்பு கவனம்

அளிக்குமாறு கூறிய பின், டிசம்பர் 31 அன்று இந்த நோய் பற்றிய தகவலை பொது மக்களுக்கு அறிவித்ததோடு, பொது இடங்களில் கூட்டம் கூடுவதை தவிர்க்குமாறும், முகக் கவசங்கலை அணியுமாறும் அறிவுறுத்தியது.
டிசம்பர் பிற்பகுதியில் நோயை பற்றி கண்டறிந்த சீனா, இந்த நோயை பற்றி ஏதுமே அறியாத சீனா, டிசம்பர் 31ற்குள் இந்த அறிவிப்பை செய்தது. இதை ஒப்பிடுகையில், சீனா இந்நோயை பற்றி பல தகவல்கள் அளித்த பின்பும், ஜனவரி இறுதியில் முதல் நோயாளியை கண்டறிந்த பல நாடுகள் மார்ச் வரை இப்படிப்பட்ட அறிவிப்பை மேற்கொள்ளவில்லை என்பதை இணைத்து பார்க்க வேண்டும்.
இந்த நேரம் குறித்து பின்னாளில் துவங்கிய பொய் பிரச்சாரங்களில் ஒன்று, லீ வென்லியாங் என்ற டாக்டர் இந்நோயை பற்றி வெளியே கூற விடாமல் அவரை கைது செய்து சீனா முடக்கியது என்பதாகும். இந்த மருத்துவர் தன் சமூக வலைதளத்தில் சார்ஸ் போன்ற நோய் பரவி வருவதாக டிசம்பர் 30 அன்று பதிவிட்டது உண்மை தான். ஆனால் ஏற்கனவே கூறியது போல், டிசம்பர் 27 அன்றே இந்த வைரஸ் பரவி வருவது பற்றி அனைத்து சீன டாக்டர்களும் அறிந்திருந்தனர். மேலும் ஊகான் மருத்துவமனைகளும் இதற்கேற்ப நடவடிக்கைகள் எடுத்து வந்தன. ஆகையால், சீனா அதன் அறிவியலாளர்களிடமிருந்து மறைக்க ஏதுமில்லை.
மேலும், இந்த நோயை பற்றி சீனாவின் தலைசிறந்த ஆய்வாளர்கள் ஆய்வு செய்து வந்த நேரத்தில், முழு உண்மையை அறியாமல், இந்த டாக்டர் உரிய சுகாதாரத் துறை அதிகாரிகளிடம் கூறாமல், நேராக சமூக வலைதளத்தில் பதிவிட்டது தவறென்று காவல்துறை அவருக்கு எச்சரிக்கை செய்தது. அதே சமயம் அவர் கைது செய்யப்பட்டதாக முதலாளித்துவ ஊடகங்கள் சொல்வது பொய்யாகும்.
மேலும் பின்நாளில் இவ்வாறு எச்சரித்தும் தவறு என சீன உச்ச நீதி மன்றம் தீர்ப்பளிக்க, ஊகான் மாநகராட்சி அந்த டாக்டரின் குடும்பத்திடம் மன்னிப்பு கேட்டனர் என்பது குறிப்பிடத்தக்கது. ஆக, மறைப்பதற்கு எவரும் அறியாத ஒன்றை இந்த டாக்டர் கூறவும் இல்லை; அவர் துன்புறுத்தப்படவும் இல்லை.
மேலும், இந்த நோயை பற்றிய ஆய்வை துரிதப்படுத்திய சீனா, ஜனவரி 3 அன்றே உலக சுகாதார அமைப்பையும்,அனைத்து முக்கிய நாடுகளையும் தொடர்பு கொண்டு, இந்நோயை குறித்து எச்சரித்தது. இதில் அமெரிக்காவும் அடக்கம். இந்நோயை பற்றிய எச்சரிக்கையை அமெரிக்காவின் நோய் தடுப்பு ஆணையம் ஜனவரி 3 அன்று பெற்றது என்பதை அமெரிக்காவே ஒப்புக்கொண்டுள்ளது. ஆனால் இதன் பின்பும், ட்ரம்ப் இன்றும் சீனா இந்நோயை பற்றி உரிய நேரத்தில் எச்சரிக்கவில்லை என பொய் கூறி வருகிறார்.

இதற்கு பின், ஒவ்வொரு நாளும் ஊகான் சுகாதார ஆணைய அதிகாரிகள் ஊடங்கங்களை சந்தித்து பதிலளித்ததோடு, ஒவ்வொரு நாளும் இந்த நூதன நிமோனியா நோயால் எவ்வளவு பேர் பாதிக்கப்பட்ள்ளனர் என்பதை தன் வலைத்தளத்தில் புதிப்பித்துக்கொண்டே வந்தது.
இக்காலத்தில் முக்கிய சாதனை, ஜனவரி 12 அன்று சீன ஆய்வாளர்கள் இந்த வைரஸின் முழு மரபணு அமைப்பை கண்டறிந்தனர். இது இருந்தால் மட்டுமே இந்நோயை கண்டறியும் சோதனை  கிட்டுகளையும், இந்நோய்க்கான தடுப்பூசியையும் உருவாக்க முடியும். நோயை பற்றி அறிந்த ஒரே மாதத்தில், இந்த மரபணு அமைப்பை கண்டறிந்தனர். இது மிகப்பெரும் சாதனை. ஒப்பீடாக, 2002ல் சார்ஸ் நோய்த்தொற்றின் பொழுதும், பின்னர் இபோலா வைரஸ் தொற்றின் பொழுதும், மரபணு அமைப்பை கண்டறிய ஆய்வாளர்களுக்கு 2-3 மாதங்கள் தேவைப்பட்டது.
மரபணு கட்டமைப்பை கண்டறிந்த சீன ஆய்வாளர்கள், உடனடியாக, வெளிப்படையாக, இந்த மரபணு அமைப்பைப் பற்றி உலக சுகாதார அமைப்பிடம் பகிர்ந்து கொண்டனர்.இதனால், லாபம் பாராமல், உலக ஆய்வாளர்கள் யார் வேண்டுமானாலும் தடுப்பூசி மருந்து கண்டுபிடிக்க வழி வகுத்தது சீனா.
மேலும் இந்த காலகட்டத்தில், இந்த தொற்றை பற்றி மேலும் அறியவும், கட்டுப்படுத்தவும் சிறப்பு குழுக்கள் வுஹான் மற்றும் அனைத்து நகரங்களுக்கும் அனுப்பப்பட்டன. மேலும் ஜனவரி 16ம் தேதிக்குள் "பி.சி.ஆர்" எனப்படும் சோதனைக் கருவிகளை உருவாக்கி, அனைத்து மருத்துவமனைகளுக்கும் அனுப்பி வைத்தது (இன்று நாம் இந்த கருவியையே சோதனைக்கு பயன் படுத்தி வருகிறோம்).
இந்த கால கட்டத்தில், இந்த வைரஸ் ஒரு மனிதரிடமிருந்து இன்னொரு மனிதரிடம் பரவி வருவதைப் பற்றிய சந்தேகங்கங்கள் ஆய்வாளர்களுக்கு இருந்தாலும், உறுதி செய்ய ஆதாரங்கள் இல்லை. இதை உலக சுகாதார அமைப்பும் உறுதி செய்தது.
இதன் பின் ஜனவரி 19 அன்று தான், சீன அரசால் வுஹான் நகரத்திற்கு அனுப்பி வைக்கப்பட்ட சீனாவின் தலை சிறந்த வைரஸ் ஆய்வாளர் ஷாங் நன்ஷங் தான் இந்த வைரஸ் ஒரு மனிதரிடமிருந்து இன்னொரு மனிதரிடம் பரவி வருவதைக் கண்டறிந்து கூறினார். இதன் ஆபத்தை உடனே உணர்ந்தது சீன அரசு. ஜனவரி 20 அன்றே அதிபர் தோழர் ஜி ஜின்பியாங் இந்த தொற்றின் ஆபத்தை குறித்து தேசத்திற்கு அறிவித்தார். இதன் பின் ஜனவரி 28 அன்று சீனா சென்ற உலக சுகாதார அமைப்பின் தலைவர் டாக்டர் டெட்ரோஸ் அதனோம் அவர்கள், சீனாவின் வெளிப்படைத்தன்மையை குறித்து பாராட்டினார்.

ஜனவரி 4ம் தேதியிலிருந்து 20ம் தேதி வரையிலான காலம் பற்றியே சீனா பற்றிய ஏகாதிபத்திய நாடுகளின் பொய் ஜோடிப்பு இன்று பரவலாக உள்ளது. குறிப்பாக, அமெரிக்காவின் முக்கிய ஊடகம் ஒன்று ஏப்ரலில் வெளியிட்ட அறிக்கையில், சீன ஜனவரி 4ம் தேதியிலிருந்து இரண்டு வாரங்களுக்கு நோயுற்றோர் பற்றிய தகவலை சேகரிக்கவில்லை எனவும், ஜனவரி 14 முதல் 20 வரை நோய் தொற்றை கட்டுப்படுத்த எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்றும் குற்றம் சாற்றியது. இந்த கட்டுக்கதையை வைத்து தான் ட்ரம்ப் உட்பட பல உலக ஏகாதிபதியவாதிகளும் இன்று சீனா மீது பழி சுமத்தி வருகின்றனர். ஆனால் இந்த பொய்க்கு எதிரான ஆதாரங்கள் நிரம்ப உள்ளன.

மேலும் ஜனவரி 20ம் தேதிக்கு பிறகு நிகழ்ந்தது தான் மிகவும் அசாதாரணமான நிகழ்வுகள். உடனடியாக, ஜனவரி 23 அன்றே சீன அரசு வுஹான் நகரை "லாக் டவுன்" எனும் ஊரடங்கிற்குள் கொண்டு வந்தது. இந்த தொற்றின் ஆபத்து பற்றி உலக சுகாதார அமைப்பு உணர்ந்த போதும், இது அதுவரை சந்தித்திராத புதுமையான நிலைமை என்பதால், தீர்மானமான அறிவுரையை சீனாவிற்கு வழங்க முடியவில்லை. ஆனால் சீன அரசு தைரியமாக ஊரடங்கை அமலாக்கியது.

சீன அரசு அவ்வாறு செய்வதற்கு முன், மனித வரலாற்றிலேயே எந்தநேரத்திலும், ஒரு கோடி மக்களுக்கு மேல் வசிக்கும் எந்த பகுதியிலும் "லாக் டவுன்" கொண்டுவரப்பட்டதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சீன அரசின் இந்த புதுமையான மற்றும் தைரியமான நடவடிக்கையால், இன்று உலகமே இந்த நோயை கட்டுப்படுத்துவதற்கான வழிகாட்டியாய் உள்ளது. இந்த "லாக் டவுன்" அமலாக்கிய பொழுது, சீனாவை சர்வாதிகாரத்தனமாக நடந்து கொள்வதாக சாடிய ஏகாதிபத்திய நாடுகள், இன்று சீனா ஏன் ஊரடங்கை இன்னும் விரைவாக அமலாக்கவில்லை என கேள்வி எழுப்புகின்றன. இந்த தொற்றின் ஆபத்தை பற்றி சீனா அனைத்து தகவல்களையும் அளித்திருந்தபோதும், எந்த ஏகாதிபத்திய நாடுகளும் ஒரு மதத்திற்கு மேல் "லாக் டவுன்" அறிவிக்காமல் இருந்தன. ஆனால் தொற்றை பற்றி ஏதுமே தெரியாமல் இருந்த சீனா, ஒரே வாரத்திற்குள் "லாக் டவுன்" அறிவித்திருக்க வேண்டும் என இப்பொழுது எதிர்பார்ப்பது எவ்வளவு வேடிக்கை!

ஆனால் சீனா கடைபிடித்த "லாக் டவுன்", இன்று இந்தியா கடை பிடிப்பது போல் உழைக்கும் மக்களை உணவின்றி தவிக்க விடும் கொடிய "லாக் டவுன்" அல்ல. ஹூபேய் மாகாணத்தின் ஒவ்வொரு தெருவிற்கும், ஒவ்வொரு பகுதிக்கும், ஒரு அதிகாரியை நியமித்து, அங்குள்ள ஒவ்வொருவருக்கும் உணவும் மருந்தும் வீட்டிற்கே கிடைப்பதை உறுதி செய்தது. எவரும் வீட்டை

விட்டு வெளியே வர சிறிதும் அவசியமற்ற ஏற்பாடுகள் செய்தது. பச்சை வழிப் பாதைகள் அமைத்து, சீனாவின் இதர பகுதிகளிலிருந்து ஹூபேய்க்கு உணவு, மருந்து மற்றும் இதர தேவைகள் அனைத்தும் தங்கு தடையின்றி உள்ளெ வர வழி செய்தது. வீட்டிற்குள்ளேயே இருப்போர் மனநலத்தை உறுதி செய்ய இணைய வழி ஆலோசனை மையங்களை உருவாக்கியது. இவ்வாறு மக்கள் நலனில் எந்த குறையும் ஏற்படாமல், அனைத்து நடவடிக்கைகளும் எடுத்து.

ஒவ்வொரு படியிலும், தாங்கள் எடுக்கும் நடவடிக்கைகள் குறித்தும், தாங்கள் செய்யும் தவறுகள் குறித்தும் உலக நாடுகளுக்கு அறிவித்துக்கொண்டே வந்தது. ஆனால் இந்த அனைத்து தகவல்களும் எச்சரிக்கைகளும் அறிந்திருந்த போதும், எந்த ஏகாதிபத்திய நாடும், ஏறத்தாழ இரண்டு மாதங்கள் வரை எந்த விதமான ஏற்பாடுகளும் செய்யாமல் இருந்தன.

தன் மக்களின் நலனில் சிறிதும் கவலை இல்லாத ஏகாதிபத்திய நாடுகள், அதன் முதலாளித்துவ கொள்கைகளால் இன்று அந்நாடுகளில் தொற்று கட்டுக்கடங்காத நிலைக்கு சென்ற பின், சீனா பொய்யான தகவல்களை அளித்ததாகவும், சீனா அறிவித்ததை விட அங்கு பன்மடங்கு மக்கள் இறந்ததாகவும் பொய் பரப்பி வருகின்றது. ஆனால் இதையும் பொய்யென நிறுவியது சீனா.

பிப்ரவரி இரண்டாம் வாரம், டாக்டர் பிரூஸ் அயல்வார்ட் ஒரு மருத்துவர்கள் குழுவை உலக சுகாதார அமைப்பு ஊகான் மற்றும் இதர பகுதிகளுக்கு அனுப்பியது. அவர்கள் சீனாவின் நடவடிக்கைகளை கண்டு பெருமளவில் வியந்தனர். பல்வேறு தரப்பிலிருந்தும் தரவுகளை சேகரித்த அவர்கள், சீன அரசு வெளியிட்டுள்ள தரவுகள் உண்மை தான் என்பதை உறுதி செய்தனர். இவ்வளவு சிறப்பாக, குறைத்த இறப்பு விகிதத்தோடு நோயை கட்டுக்குள் கொண்டு வந்ததைக் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கினர். இந்த உண்மையை பொறுக்க முடியாத ஏகாதிபத்திய நாடுகள், உலக சுகாதார அமைப்பு சீனாவிற்கு ஆதரவாக இருப்பதாக குறை கூறியது. ஆனால், அங்கு சென்ற மருத்துவர்களில் பாதி, உலக சுகாதார அமைப்புடன் சார்பு இல்லாத தன்னிச்சையான மருத்துவர்கள். அவர்களும் இதே உண்ம்மையைத் தான் கூறுகின்றனர். ஆக, சீனா இந்நோயை திறம்பட கட்டுக்குள் கொண்டு வந்தது ஜோடிப்புகளுக்கு அப்பாற்பட்டு நிரூபிக்கப் பட்டது.

சீனாவின் இந்த சிறப்பான நடவடிக்கைகள் குறித்து உலக விஞ்ஞானிகளுக்கு பாராட்ட சொற்கள் இல்லை. மருத்துவர் பிரூஸ் அயல்வார்ட் சீனா சென்று கண்ட பின் கூறுகையில், "எவருமே அறியாத நோயொன்றை எதிர்கொண்ட சீனா, அதை கட்டுப்படுத்த பாரம்பரிய முறைகளோடு நவீன அறிவியலையும்

கலந்து, கற்பனைக்கெட்டாத முறையில் சாதனை செய்துள்ளது" என்றும், "இந்த போராட்டத்தில் சீன மக்கள் செய்துள்ள தியாகத்திற்கு உலகமே அவர்களுக்கு நன்றிக்கடன் பட்டுள்ளது" என்றும், "சீனாவின் சிறந்த நடவடிக்கைகளால், இந்த நோயை கட்டுப்படுத்தியதோடு, இந்த தொற்றை சமாளிக்க அவசியமான விலைமதிப்பில்லாத நேரத்தை சீனா உலகிற்கு பெற்றுத் தந்துள்ளது" என்றும் போற்றினார்.
உலக சுகாதார அமைப்பின் மருத்துவர் கவுடன் கலியா, "ஒரு தொற்று நோயின் பொழுது, அது பெருமளவிலான மக்களை தாக்கி, பின் அடங்குவது தான் அதன் இயற்கையான போக்கு. ஆனால் சீனா இந்த போக்கையே மாற்றி, தொற்று நோயை முளையிலேயே வெட்டிவிட முடியும் என்று உலகிற்கே நிறுவியுள்ளது" என்று பெருமையாக கூறினார். மேலும் மக்களுக்கு பொது சுகாதாரம் வழங்குவதன் அவசியத்தை சீனா காட்டியுள்ளதாக அவர் புகழ்ந்தார்.
இது எதையுமே ஏற்க மறுக்கும் ஏகாதிபத்தியவாதிகள், முதலில் உலக சுகாதார அமைப்பின் தலைவர் மருத்துவர் டெட்ரோஸ் சீனாவின் கைக்கூலி என்று கூறியது. பின் அனைத்து மருத்துவர்களும் புகழ, அந்த மொத்த அமைப்பே சீனவின் கைக்கூலி எனக் கூறியதோடு, அந்த அமைப்பிற்கான நிதியை முடக்கியது.
உலக சுகாதார அமைப்பின் தலைமையில் ஒரே ஒரு மருத்துவர் மட்டுமே சீன மருத்துவர். இதர அனைவருமே பெரும்பாலும் மேற்கத்திய நாடுகளைச் சேர்ந்தவர்களே. உலக சுகாதார அமைப்பின் நிதியில் பெரும்பான்மை அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவிடமிருந்தே வருகின்றது. வெறும் ஒரு சதவிகிதத்திற்கும் குறைவான நிதி மட்டுமே சீனாவிடம் இருந்து வருகிறது. உலக சுகாதார அமைப்பிற்கு சீனாவிற்கு எதிராக பேசி, அமெரிக்கா-பிரிட்டனை ஆதரிக்க அனைத்து உந்துதலும் உள்ளது. ஆனால் சீனாவை ஆதரிக்க அறிவியல் நேர்மையைத் தவிர வேற எந்த உந்துதலும் இல்லை.
இதனால் சீனா தவறுகளே செய்யவில்லை என்று கிடையாது. ஆனால் தாங்கள் செய்யும் தவறை ஒப்புக்கொண்டதோடு, அதை உலக நாடுகள் செய்யாமல் இருக்குமாறும் கேட்டுக்கொண்டனர். உதாரணமாக, சுகாதாரப் பணியாளர்கள் மத்தியில் தொற்று பரவுவதை சற்றே தாமதமாகவே கண்டறிந்த சீனா, உடனடியாக பாதுகாப்பு உபகரணங்களை அவர்களுக்கு அளித்ததோடு, இந்த தவறை மற்ற நாடுகள் செய்யாமல் இருக்குமாறு கேட்டுக்கொண்டனர். ஆனால், இன்றும் ஏகாதிபத்திய நாடுகள் தங்கள் நாட்டு சுகாதாரப் பணியாளர்களுக்கு பாதுகாப்பு உபகரணங்கள் வழங்க சரியான ஏற்பாடுகள் செய்யாமல், அவர்களின் இறப்புக்கு காரணமாகி வருகிறது.

மேலும், இந்த நோயை சிறப்பாக கட்டுப்படுத்திய சீனாவே, தங்களின் பாதையில் பல தவறுகள் இழைத்ததாகவும், அதிலிருந்து பாடம் கற்க வேண்டும் என்றும் ஒப்புக்கொண்ட முதல் உலக அதிபர் தோழர் ஜி ஜின்பிங் தான். ஆனால் தொற்றை கட்டுப்படுத்த தவறிய ஏகாதிபத்திய அரசுகள், இன்றும் தங்களின் கொடிய தவறுகளுக்கு பொறுப்பேர்க்காமல், பிறரை குற்றம் கூறி வருகின்றன.

சீனாவின் சிறப்பான திட்டமிடுதலும், அறிவியல் ரீதியான நடவடிக்கைகளும் உலக நாடுகள் அனைத்துமே கற்க வேண்டிய முக்கிய பாடம். அனால் இதை ஒப்புக்கொண்டால், தங்கள் நாட்டில் கம்யூனிச உணர்வு வளர்ந்துவிடுமோ என்ற அச்சத்தில், வலதுசாரி ஏகாதிபத்தியவாதிகள் இதை ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். இன்றும், பல்வேறு ஆய்வுகளும் இந்த வைரஸ் எந்த ஆய்வுக்கூடத்திலும் உருவாக்கவில்ல, இயற்கையில் உருவானதே என்று உறுதியாக கூறிய பின்னும், இந்த வைரஸ் சீன ஆய்வகத்தில் உருவானதாக பொய்யுரைத்து வருகிறார் ட்ரம்ப். மேலும் தன்னை தேர்தலில் தோல்வியுறச் செய்ய சீனா எந்த எல்லைக்கும் செல்லும் என குற்றம் சாட்டி வருகிறார். நாள் ஒன்றிற்கு 2500க்கும் மேற்பட்டோர் இறக்கும் பொழுதும், ட்ரம்ப் அரசின் கவனம் மக்களை காப்பாற்றுவதில் இல்லை; தேர்தலில் வெற்றி பெறுவதிலேயே உள்ளது.

மக்களின் சுகாதார மற்றும் பொது நலனை சந்தைகள் உறுதி செய்ய முடியாது, அரசின் பங்கு மிக முக்கியம் என்பதை இந்த கோவிட் தொற்றின் சமயத்தில் சீனாவும் இதர சோசலிச நாடுகளும் நிறுவியுள்ளன.